



ஆரோக்கியமான பற்களுக்கும் ஈறுகளுக்கும் என்றுமே ஆதாரம்
நம்பகமான கிராம்புத் தைலம் அது தருமே பரிகாரம்

புதிய

இதோ

# ப்ராமிஸ் டூத் பவுடர்

## காலங்காலமாக பயன்பட்டு வரும் கிராம்புத் தைலம் கொண்டது.

கிராம்புத் தைலம் கொண்ட
ப்ராமிஸ் டூத் பவுடர்
அளிக்கும் நன்மையைப் பாருங்கள்.

- வாய்த் துர்நாற்றத்தையும் பற்சிதைவுக்குக் காரணமான கிருமிகளையும் அகற்றுகிறது.
- உங்கள் சுவாசத்திற்கு புத்துணர்ச்சியையும் தூய்மையையும் தருகிறது.
- உங்கள் ஈறுகளை இதமாகத் தேய்த்துக் கொடுத்து ஆரோக்கியத்தை உண்டாக்குகிறது.
- உங்கள் பற்களுக்கு பளிச்சிடும் வெண்மையைத் தருகிறது.
- பெப்பர்மிண்ட் மற்றும் கிராம்புத தைலத்தின் இணையற்ற சுவை.




பல்சாரா

**கிராம்புத் தைலம் கொண்ட புதிய இணையற்ற ப்ராமிஸ் டூத் பவுடர்**

CHAITRA-BLS-438 TAM



# கால்பந்தாட்டமும்

1976ல் அகில இந்திய கால் பந்தாட்டக் கழகம் டார்ஜிலிங்கில் கூடியபோது கால் பந்தாட்டக்காரர்களுக்கு உதவித் தொகை வழங்குவதற்காகப் பெடரேஷன் கோப்பைப் பந்தயம் நடத்துவதெனத் தீர்மானமாயிற்று. ஆனால் அந்தக் குறிக்கோள் இன்னும் நிறைவேற்றப்படவில்லை! பெடரேஷன் கோப்பைப் பந்தயம் இந்தியாவின் சாம்பியன் விளையாட்டு கிளப் எது என்று முடிவெடுக்கவே பெரும்பாலும் உதவி வருகிறது.

• • •

சென்னையில் மோகன் பாகனுக்கும் மொகமடன் ஸ்போர்ட்டிங் கிளப்புக்கும் நடைபெற்ற இறுதிப் பந்தயத்தில் இரு கோல்களைப் போட்டவர்கள் உலகநாதனும் ஷியாம் தாபாவும்.

இருபத்தெட்டு வயதான உலகநாதன் பெங்களூரைச் சேர்ந்தவர். இவரைப் பிரபல கால்பந்து ஆட்டக்காரர் அருமைநாயகம் தான் மோகன் பாகனுக்குச் சிபாரிசு செய்தவர்! ஆறு வருஷங்களாக உலகநாதன் மோகன் பாகன் குழுவுக்கு ஆடி வருகிறார்! பங்களாதேஷ் கால் பந்தாட்டக்காரர் திலீப் பலித்தின் சகோதரியை, வங்காளிப் பெண்ணை உலகநாதன் மணந்து கொண்டிருக்கிறார்! கால்பந்தாட்ட மைதானத்தில் மின்னலெனப் பாய்ந்து கோலடிக்கும் இவரது திறமை அயர வைக்கிறது.

மூன்று வருஷங்களுக்கு முன்பே மிகப் பிரபலமாகியும் அலட்டிக் கொள்ளாது பெருங்காயம் வைத்த பாண்டம் போல் மணந்து வருபவர் ஷியாம் தாபா. இவரது 'பைசிக்கிள், கிக்' ரொம்பப் பிரசித்தமானது!

சாம்பியன் கிளப் என்னும் புகழைப் பெற்ற மோகன் பாகன் கால் பந்தாட்டக் குழுவின் வெற்றி அபார ஆட்டத் திறன் படைத்த மொகமடன் கிளப் குழுவினரது திறமையை ஒளிமங்கச் செய்துவிட்டது! ஒரு சாதா காலம் நல்லதொரு கால் பந்தாட்ட

# வாழ்க்கைப் போராட்டமும்!

# வெளிச்சத்துக்கு வாங்க

படத்தின் போக்கு பலவீனமும் கதை யமைப்பில் இருக்கிறது. அதிரியான ஜந்தாறு லோக்டர்களை வரிசைப் பிரிவைக்துப் படம் செய்திருக்கிறார்கள்.

அதிர்ச்சியில் பேசும் சக்தி இழந்த பெண் தான் நாயகி. முகபாவங்கள் சிறப்பாக இல்லாவிட்டாலும் குழந்தை முகம் அனு தாபம் பெறுகிறது.

ஊமைப் பெண்ணுக்கு வாழ்வளிக்கும் நாயகன் எாவகாசமாய் அவள் நடத்தையில் சந்தேகம் கொண்டு ஆவேசப்பட, அதிர்ச்சியில் நாயகி மீண்டும் பேசும் சக்தி பெறு-வாள். ராஜேஷ்தான் கொஞ்சம் பளிச் என்று வருகிறார். நிறையப் புது முகங்கள் படத்தின் விசேஷம். யாரும் தேறாதது துரதிஷ்டம். படத்தில் வரும் வயசுப் பெண்கள் தாராளமாய்க் கவர்ச்சி காட்டுகிறார்கள். படத்தில் பாதி காமெடி டிராக் — வெறும் கூத்தாய் இருப்பதால் சிரிப்பு இயல்பாய் வர மறுக்கிறது. இந்த அழகில் கவுண்ட மணியும் வி. கே. ஆரும் இரண்டர்த்த வசனம் பேசிக் கஷ்டப்படுத்துகிறார்கள்.

ஆறுதலான அம்சம் ஜெமினி ராஜசேகரின் கேமராதான். சுத்தமான வேலை. பாடல் ஒன்றும் உருப்படியாக இல்லை. ஒன்றைப் பண்ண முடியாமல் ஒன்பதைச் செய்த கதையாய் விஜய சாரதி கதை-திரைக் கதை, வசனம், டைரக்ஷன் என்று எல்லாவற்றையும் தம் தலையில் சுமக்கிறார்.

''வெளிச்சத்துக்கு வாங்க'' — இது கதையோடு சம்பந்தமில்லாத தலைப்பை நியாயப் படுத்தப் படத்தில் வரும் கடைசி வசனம். சரி!

நாங்க ''வேற படத்துக்குப் போங்க!''

—''சிந்து ஜீவா''



விருந்தினைப் படைத்த சென்னை கால் பந்தாட்டக் கழகத்தினைப் பாராட்டி மகிழாத கால் பந்தாட்ட ரசிகர் இல்லை.

• • •

பெடரேஷன் கோப்பைப் பந்தயம் ஆரம்ப மானதற்கான பிரதான நோக்கம் நிறைவேற வேண்டியதன் அவசியத்தை மோகமடன் ஸ்போர்ட்டிங் குழுவின் 'லெஃப்ட் ஃபீல்டு' வீரரான திரு பிரஸூனுடன் பேசிக்கொண்டிருக்கும்போது உணர்கிறோம்.

அவர் கூறுகிறார்:

''நான் கல்கத்தாவில் ஸ்டேட் பாங்கில் பணிபுரிகிறேன். என்னைப் போலவே எங்கள் குழுவில் பிறரும் நல்ல வேலைகளில் இருப்பவர்கள்தான். ஆனால் சில சந்தர்ப்பங்களில் ஒரு மாதத்துக்கும் மேலாக, இதர விடு முறைகளுக்கும் மேலாக நான் லீவு எடுக்க வேண்டியிருக்கிறது. அப்போது எனக்குச் சம்பளம் வெட்டப்படுகிறது. பாங்க் விதிப்படி எங்கள் இன்கிரிமெண்ட் வெட்டப்படுகிறது; என் சீனியாரிட்டி பாதிக்கப்படுகிறது. உல்லாசமாக மாசா மாசம் சம்பளம் வாங்கி ஜாலியாகக் கால் பந்து ஆடும் வர்க்கமல்ல நாங்கள்.

''ஆரம்ப காலத்தில் — எங்கள் பள்ளி நாட்களில், கைக்கடிகாரம், மோதிரம் இவைகளை விற்று, பூட்ஸ், ஷார்ட்ஸ் என்று வாங்கி அணிந்து கால் பந்தாட்டம் பழகினோம். அப்போதும் பொருளாதாரப் பற்றாக்குறை தான்; ஆதரவு இல்லைதான். இப்போது தேசிய அளவில் விளையாடும்போதும் அதே நிலைமை நீடிப்பதுதான் ரொம்பவும் வேதனையாக இருக்கிறது.

''பிரபல வீரர்கள் புஷ்வா, ராமன், சத்தார், நய்யார் இவர்களெல்லாம் இப்போது வறுமைக் கோட்டுக்குக் கீழே வாழும் நிலையிலிருக்கிறார்கள். சிலர் கல்கத்தா சணல் ஆலைகளில் சாதாரணத் தொழிலாளிகளாக வேலை பார்க்கிறார்கள். சிலர் எங்களைப் போன்ற பிரபல குழுவினரிடம் வந்து, 'ஒரு பத்து ரூபாய் இருக்குமா? கைமாற்றாகத் தாருங்களேன்' என்று கேட்கும்போது கண் கலங்குகிறது.

''ஒரு வேடிக்கை தெரியுமா? நான் மத்திய அரசால் அர்ஜுனா விருது தரப்பட்டவன். ஆனால் என்னைப் பேட்டி காணக்கூட எங்கள் வங்காள மாநில டெலிவிஷன் வரவில்லை!

''அதே சமயம் உங்கள் மாநில ஹாக்கி வீரர் பாஸ்கரன் அர்ஜுனா விருது பெற்றதைப் பாராட்டும் வகையில் உங்கள் மாநில அரசு அவருக்கு ஒரு வீடு அளித்திருப்பதைக் கேள்விப்படும்போது மிகவும் மகிழ்ச்சியடைகிறேன். இந்தியா பூராவும் ஒட்டு மொத்தமாக விளையாட்டு வீரர்கள் புறக்கணிக்கப்படவில்லை என்பதை நினைக்கும்போது ஆறுதலாக இருக்கிறது.''

—குண்டுமணி, பிரபுசங்கர்

புகைப்படம்: ஜி. கார்த்திக்



# நியூஸ் ஜூஸ்

— அனிதா

'**வி**ருப்பு வெறுப்பற்ற உண்மை' என்ற ஆபத்தான பாதையில் செல்கிறார் ஆர்.வி.! கொஞ்ச நாளைக்கு முன், ''மொத்த வியாபாரத்தில் விலைகள் குறைந்துதான் உள்ளன; சில்லறை வியாபாரத்தில்தான் உயர்வாக இருக்கின்றன. அத்தியாவசியப் பண்டங்களின் விநியோகம் சரியில்லை'' என்று கூறி சிவில் சப்ளை அமைச்சகத்தின் வயிற்றெரிச்சலைக் கொட்டிக் கொண்டார்.

இப்போது அரசுத் துறை நிறுவனங்களைக் கடுமையாகக் கண்டித்துப் பேசி, தொழில் துறை அமைச்சகம் பற்களை நறநறவென்று கடிக்க வழி வகுத்திருக்கிறார்! ''அரசுத் துறை நிறுவனங்கள் சதா நஷ்டத்தையே கண்டு ஆண்டுதோறும் பட்ஜெட்டில் ஆதரவை எதிர்பார்க்கின்றன. இதற்கு முடிவு கட்ட வேண்டும்'' என்ற ஆர். வி., மேலும் ஒரு குண்டைத் தூக்கிப் போட்டிருக்கிறார். 'அரசுத் துறை நிறுவனங்களில் லாப நோக்கு மட்டும் பிரதானமல்ல' என்று கூறப்படும் சால்ஜாப்பை ஆர். வி.யின் இந்தக் குண்டு தகர்த்தெறிந்து விட்டது. 'லாப நோக்கு மட்டுமே பிரதானமல்ல என்பதால் உற்பத்திப் பொருளுக்கு விலை குறைத்து நிர்ணயிக்கப்படுகிறது. என்றாலும் இந்த விலை குறைப்பால் ஏற்பட வேண்டிய நியாயமான நஷ்டத்துக்கும் அதிகமாகவே அரசுத் துறை நிறுவனங்கள் நஷ்டப்படுகின்றன!'' என்று சாடியுள்ளார் ஆர். வி.

நஷ்டம் காண்பதில் அரசுத் துறை நிறுவனங்களுக்கு உள்ள அபார ஆற்றலை இதன் மூலம் புரிந்து கொண்டு பிரமிக்கும்போதே, 'இப்படிப் பச்சை உண்மைகளைப் பேசும் ஆர். வி.யை நீடிக்கவிடுவார்களா? 'என்று எண்ணு கையில் நடுக்கமாகவும் இருக்கிறது.

பிரதமருக்கு உதவ ராஜீவ் வந்து சேரப் போகிறார். நடக்கப் போகும் செல்வாக்குப் போட்டியில் யார் யார் கை உயரப் போகிறதோ? யார் யார் தலை உருளப் போகிறதோ!

● ● ●

● பம்பாயில் மராத்தி எழுத்தாளர்கள் ஊர்வலம் போனார்கள். புத்தகங்களை மக்கள் இரவல் பெறக் கூடாது; விலைக்கு வாங்க வேண்டும் என்று கேட்டுக் கொள்ளவே இந்த ஊர்வலம்! வாங்கப்பட வேண்டிய நூல்களின் பெயர்களை அவர்கள் கோஷமாக எழுப்பினார்கள். தமிழகத்தில் இப்படி ஓர் ஊர்வலம் நடக்குமா? நடந்தால் என்ன கோஷங்கள் எழும் என்று சிந்தித்தேன்:

''வாங்காதே! வாங்காதே! வேஷம் போடுபவன் நூலை வாங்காதே!''

''தீண்டாதே தீண்டாதே! அகாதமி பரிசு நாவலைத் தீண்டாதே!''

''வேண்டாமே! வேண்டாமே! ஆபாச எழுத்தாளன் புத்தகம் வேண்டாமே!''

சந்தேகமே இல்லை! இப்படிப் பட்ட கோஷங்கள்தான் எழும்! நம்மிடையே அவ்வளவு ஒற்றுமை!

● ● ●

● 'ராஜாஜி பிறந்த ஊரான தொரப்பள்ளியிலேனும் கள்ளு — சாராய — மதுக் கடைகள் திறக்கப்படக் கூடாது' என்று சர்வ கட்சித் தலைவர்கள் மாவட்ட ஆட்சியாளரிடம் கோரிக்கை மனுச் சமர்ப்பித்துள்ளனர்! ராஜாஜியை அவர்கள் புரிந்து கொண்ட லட்சணம் அவ்வளவுதான்! தம்முடைய ஊருக்கு மட்டும் தனிச் சலுகை தேடுகிறவரா அவர்? ''நான் பிறந்த தொரப்பள்ளியில் கள்ளுச் சாராயக் கடைகள் திறந்தாலும் பாதகமில்லை; தமிழகத்தின் மற்றப் பகுதிகளைக் காப்பாற்றுங்கள்!'' என்றுதான் அறிக்கை விடுவார்.

● ● ●

● 'ஓவர்டைம் மனப்பான்மை' என்று சொன்னாலே பலருக்கு ஒரேயடியாகக் கோபம் வருகிறது. என்றாலும் ஒரு தீப்பெட்டி வாங்கும் போதுகூட வரி கொடுத்து அழும் கோடிக் கணக்கான மக்கள், அந்த வரிப் பணம் எப்படிச் செலவாகிறது என்று அறிய உரிமை பெற்றுள்ளனர். மத்திய அரசு ஊழியர்கள் பெற்ற ஓவர் டைம் அலவன்ஸ்:

77—78ல் ரூ. 56,21,28,000
78—79ல் ரூ. 72,08,77,000
79—80ல் ரூ. 80,26,47,000

படிப்படியாக உயர்த்துவதில் எப்பேர்ப்பட்ட சாதனை பார்த்தீர்களா? பொதுவாக அரசு அலுவலகங்களில் தேவைக்கு அதிகமாகவே பலர் வேலையில் அமர்த்தப்பட்டிருக்கின்றனர் என்பதையும் மறவாமலிருந்தால் சாதனை சாதாரணமானதல்ல என்பது புரியும்!

● ● ●

● நன்னெறிகளைப் பரப்பி, உலக அமைதிக்குப் பாடுபட்டு, இறையுணர்வை வளர்த்து வரும் போப்பாண்டவரைச் சுட்டதை விட இழி செயல் வேறென்ன இருக்க முடியும்?

ஏசுவைச் சிலுவையில் இட்டது போன்ற கொடுமைதான் இது. அந்தக் கொடுமை, ஓர் அன்பு மதம் உலகெல்லாம் தழைக்க வழிவகுத்தது.

போப்பாண்டவர் சுடப்பட்ட சம்பவமும் கண்டனத்தைப் பெறும்போதே கருணையைப் பரப்புவதாக அமைந்து உலகில் சாந்தி நிலவவும் சகோதர பாசம் பெருகவும் வழி வகுக்கட்டும். போப்பாண்டவர் துரிதமாகப் பூரண ஆரோக்கியம் திரும்பப் பெறப் பிரார்த்திப்போம்.




கார்ட்டூன் - நன்றி : ஹிந்துஸ்தான் டைம்ஸ்

# ராஜீவ் செய்வது சரியா?

**கலாநிதி எம்.பி. (தி.மு.க.)**

உத்தரப் பிரதேச அமேதி தொகுதியிலிருந்து நாடாளுமன்றத்துக்கு ராஜீவ் காந்தி போட்டியிட மனு தாக்கல் செய்துள்ளார். அரசியலமைப்புச் சட்டப்படியும் சரி, தேர்தல் அமைப்புச் சட்டப்படியும் சரி அவர் போட்டியிடுவது தவறானதோ, அனுமதிக்க முடியாததோ அல்ல. அப்படி இருக்கும் போது ஏன் பலர் ஆட்சேபணைக் குரலெழுப்புகிறார்கள்?

ஒரு நாட்டின் பிரதம மந்திரியின் மகன் அந்நாட்டின் தேர்தலில் போட்டியிடக் கூடாதா? போட்டியிடுவது தவறு? இவர்கள் எதிர்ப்புத் தெரிவிப்பதெல்லாம் தாயின் ஆட்சி அதிகாரச் செல்வாக்கினைப் பயன் படுத்துவார் என்ற நினைப்பில்தான். ஆனால் பாரதப் பிரதமர் தன்னலமில்லாத சேவை மனப்பான்மை கொண்டவர், என்பது ஜனதா ஆட்சிக்குப் பதில் மக்கள் அவரைத் தேர்ந்தெடுத்ததிலிருந்தே தெரிகிறது.

ராஜீவ் காந்தி திடீரென்று அரசியலுக்கு வந்தவர் என்று பலர் கூறலாம். இது அரசியலில் கீழ்த்தரமான ஒரு வாதம். மக்கள் குரல் மகேசன் குரல். அரசியலில் இது அருள் வாக்கு. இதைப் புறக்கணிப்பவர்கள் மக்களையே புறக்கணிக்கிறார்கள் என்றுதானே அர்த்தம்? பல இ. காங்கிரஸ் கட்சித் தலைவர்கள் ராஜீவ் காந்தி வரவேண்டும் என்று விரும்பிக் கேட்டதன்விளைவாகத்தான் ராஜீவ் வந்தார். தாமாக எதற்கும் ஆசைப்பட்டு வரவில்லை. பிரதமரிடம் கட்சித் தலைவர்கள் கேட்டபோது, ராஜீவ் அரசியலுக்கு வருவதும், வராததும் அவரைச் சார்ந்தது எனப் பெருந்தன்மையாகக் கூறிவிட்டார்.

இந்திராவுக்கு வாரிசாக, அடுத்த பிரதமரைத் தேர்ந்தெடுக்கப் போகிறார்கள் என்றெல்லாம் எதிர்க் கட்சியினர் தேவையில்லாமல் அவர்களாகவே பேசுகிறார்கள், எழுதுகிறார்கள். ராஜீவ் காந்தியைப் பொறுத்தவரை அவர் ஒரு சிறந்த நாடாளுமன்ற உறுப்பினராக வேண்டும் என்பதுதான் அவரது எண்ணமாக இருக்க முடியும். பதவிகளைப் பெறுவது இவரது நோக்கமல்ல என்பது தமக்கிருந்த உயர் ஊதியம் தரும் உத்தியோகத்தைத் துறந்து விட்டு ஜனநாயக முறையில் தேர்தலில் போட்டியிடுவதிலிருந்து அறிய முடியும்.



சஞ்சய் காந்தியின் அடிச்சுவட்டில் பிரதமர் இந்திரா காந்தியைப் பின்பற்றி நடக்க, இவர்கள் இருவரையுமே நன்கு அறிந்த ஒருவரால் முடியுமெனில் ராஜீவ் காந்தியை விட இந்த அம்சத்தில் சிறந்தவர்கள் இருக்கிறார்களா?

✖ கலாநிதி

**ஜனா கிருஷ்ணமூர்த்தி**
**தலைவர், தமிழ்நாடு பாரதீய ஜனதா கட்சி**

இந்நாட்டின் ஒரு குடிமகன் என்ற முறையில் அரசியல் அமைப்புச் சட்டம் தேர்தல் சட்டம் ஆகியவற்றின் வரம்புக்கு உட்பட்டு திரு ராஜீவ் தேர்தலில் போட்டியிடுவதை எவரும் ஆட்சேபிக்க முடியாது.

இந்நாட்டுப் பிரதமரின் மகன் என்ற முறையிலும் கூட போட்டியிடுவதற்கான சட்ட உரிமையை அவர் இழக்கவில்லை. தாய் பிரதமராக இருப்பதால் இத்தேர்தலில் வெற்றி பெறத் தாயின் ஆட்சி, அதிகாரச் செல்வாக்கைப் பயன்படுத்துவாராதலால் சட்ட ரீதியான உரிமை இருந்தும், தார்மீக ரீதியாக அவர் போட்டியிடுவது விரும்பத் தக்கதல்ல எனப் பொது வாழ்க்கையில் உயர் நெறிகளைக் கடைப்பிடிக்க விரும்புவோர் கூறுவர். எளிதாகப் புறக்கணிக்க முடியாத கூற்றாகும் இது. ஆனால் பொது வாழ்க்கையில் தார்மீக நெறிமுறைகளைக் கடைப்பிடிக்கும் கட்சிகளுக்கும் தலைவர்களுக்கும் அல்லவா இது பொருந்தும்! சுயநலத்துக்காக மனச்சாட்சியின் பேரால் கட்சியையே உடைத்த இ. காங்கிரஸ் கட்சியின் தலைவர்களா தார்மீக அரசியலைக் கடைப்பிடிப்பார்கள்?



இதுநாள்வரை அரசியலுக்கும் தமக்கும் காததூரம் எனக் கூறிவந்த திரு ராஜீவ் இன்று திடீரென்று தேர்தல் அரசியலில் குதிப்பது ஏன்? கட்சியின் உறுப்பினராகச் சேர்ந்து, கட்சியின் பலபடிகளில் பணியாற்றிப் பின் கட்சித்தலைவர்களின் அங்கீகாரம் பெற்று, அவர்களின் ஆதரவை

✖ ஜனா கிருஷ்ணமூர்த்தி

நாடி, அதன் பிறகு போட்டியிட அனுமதி பெற வேண்டும். ஆனால் ராஜீவ் நிலை அது வல்லவே! தமது அரசியல் வாழ்க்கையின் முதல் அடியையே அதிகார ஏணியின் மிக உயர்ந்த படியிலேயே வைத்திருக்கிறரே? குடும்ப பாரம்பர்யப் பாத்யதை உணர்வல்லவா இதற்குக் காரணம்?

எந்த நோக்குடன் திரு ராஜீவ் இத் தேர்தலில் போட்டியிட நிறுத்தியுள்ளனர் என்பதைப் புரிந்து கொண்டால் நாடாளுமன்ற ஜனநாயகவாதிகள் அனைவருமே இது குறித்து அதிருப்தியுறுவதோடு அருவருப்படைவர்.

ராஜீவ் நாடாளுமன்ற உறுப்பினராகிச் சிறந்த நாடாளுமன்றவாதியாக வேண்டும் என்பது இந்திரா காங்கிரஸின் நோக்கமல்ல. ராஜீவுக்கும் அரசியலில் நுழைந்து நாடாளுமன்றத்தில் உறுப்பினராகி நாடாளுமன்ற ஜனநாயகத்தை வலுப்படுத்திட வேண்டும் என்ற விருப்பம் கிடையாது. விமானம் ஓட்டுவதில் உள்ள விருப்பம் ஆட்சித் தேரை ஓட்டுவதில் அவருக்கு இருந்ததாகத் தெரியவில்லை. வற்புறுத்தி அழைத்து வரப்பட்டிருக்கிறர். — ஏன்? எதற்கு?

பிரதமருக்கு வாரிசை உருவாக்கிட, இளவரசுப் பட்டம் சூட்டப்பட சஞ்சய்க்கு வாரிசாக ஒரு புதிய இளவரசை உருவாக்கிட இ. காங்கிரஸ் தலைவர்கள் முனைந்துள்ளனர். அமேதி தொகுதியில் தேர்தல் பிரசாரத்திலும் கூட ''ராஜீவைத் தேர்ந்தெடுங்கள். ஏனெனில் அதன் மூலம் உங்கள் நாடாளுமன்ற உறுப்பினரை மட்டுமல்லாது அடுத்த பாரதப் பிரதமரையே தேர்ந்தெடுக்கிறீர்கள்'' எனக் கூறத் தயங்க மாட்டார்கள்.

ஜமீன்தாரி முறை, சுதேச சமஸ்தானங்கள் ஆகியவற்றைச் சட்டப்பூர்வமாக ஒழித்து விட்டதன் மூலம் இன்றைய ஜனநாயகத்துக்கு முரண்பாடான வம்ச பாரம்பர்ய அதிகார முறையை முறித்து விட்டோம் எனக் கூறி வந்தவர்கள் இன்று இந்திய ஆட்சி முறையிலே வம்ச பாரம்பர்ய உரிமையை உருவாக்கிட முன்வந்துள்ளார்கள்.

பேட்டி: அசோக்குமார்

---



அருள்வாக்கு

## புத்திசாலித்தனம்!

தாம் சந்நியாசம் வாங்கிக் கொள்வதற்கு அம்மாவின் அனுமதியைப் பெறுவதற்காக ஆதிசங்கரர் செய்த சாமர்த்தியம் உங்களுக்குத் தெரிந்திருக்கும். அம்மாவோடு குளிக்கப் போன சங்கரர் ஆற்றில் முதலையின் பிடிக்கு வேண்டுமென்றே ஆளானார். தாயார்க்காரி பதறினள். ''அம்மா! நீ பதற வேண்டாம், நான் சந்நியாசம் வாங்கிக்கொள்ள நீ அனுமதி தந்தால் முதலை என்னை விட்டுவிடும். ஏனென்றால் துறவு பெற்றுவிட்டால் அது மறு ஜென்மா போலாகும். இந்த ஜென்மாவில் முதலையின் பிடிக்கு ஆளாக வேண்டும் என்று எனக்கு விதி இருக்கிறது. அடுத்த ஜன்மாவில் அது என்னைப் பாதிக்காது!'' என்றார் சங்கரர். அந்தத் தர்மசங்கடமான நிலையில் பெற்ற தாயார் அனுமதி தராமல் இருக்க முடியுமா? இவ்விதமாக ஆசார்யாள் சாமர்த்தியம் பண்ணி, தாயாரின் அங்கீகாரம் பெற்று — சந்நியாசி ஆவதாக அப்போதே சங்கல்பம் செய்து கொண்டார். உடனே முதலையும் அவரை விட்டு விட்டது!

''இந்த ஜன்மாவில் அருள் பண்ணுவதற்கில்லை'' என்று மஹாலக்ஷ்மி வித்யாரண்யரிடம் சொன்னவுடன் இவரும் அதே தந்திரத்தை (Tactics) கையாண்டார்.

அதாவது உடனே சந்நியாச ஆசிரமம் வாங்கிக் கொண்டு விட்டார். ''அம்மா! மறு ஜன்மா வந்து விட்டது; இப்போது ஐசுவரியத்தைக் கொடு!'' என்று லக்ஷ்மியிடம் சொன்னர்.

அவளும் தன் வாக்குப் பிரகாரம் ஸ்வர்ணத்தை வர்ஷித்து விட்டாள்.

சுற்றிலும் எங்கு பார்த்தாலும் தங்கம். [illegible]யும் கொட்டிக் கிடக்கிறது. சந்நியாசி [illegible] வித்யாரண்யருக்கு அதைப் பார்த்த [illegible] முடியாத ஏமாற்றமும் துக்கமும் [illegible]. 'அடடா! தந்திரம் செய்வ[illegible]த்தேன். கடைசியில் ஏமாந்தல்லவா போய்விட்டேன். இப்போதே துறவி [illegible]விட்டேன். இனிமேல் எனக்கு ஏது விடு? சந்நியாசி பணத்தைத் தீண்டவே கூடாதே. சயம்கிருத ஆனந்தமாக நானாகவே அசட்டுத்தனமாக உபத்திரவத்தை வேண்டி வாங்கிக் கொண்டிருக்கிறேனே. விதிப் பிரகாரம் ஏழையாகவே வாழ்ந்து ஆயுசை விட்டிருந்தாலும் அடுத்த ஜன்மத்திலாவது இத்தனை ஐச்வரியமும் பெற்று ராஜபோகமாக இருந்திருக்கலாமே!' என்று அழ ஆரம்பித்துவிட்டார்!

வித்யாரண்யர் மட்டுமில்லை. நம்மில் ரொம்பப் பேர் இப்படித்தான் வேண்டாததற்கெல்லாம் ஸ்வாமியை வேண்டிக்கொண்டு அவர் நம்மிஷ்டப்படி க்ருபை செய்த பின், 'அடாடா! நம்மிஷ்டம் என்று ஏன் இருந்திருக்க வேண்டும்? அவர் இஷ்டம் என்று விட்டிருக்கக் கூடாதா? இப்போது அறியாமையால் அனர்த்த பரம்பரையை அல்லவா வலிய வாங்கிக் கட்டிக் கொண்டிருக்கிறோம்'' என்று விசனிக்க வேண்டியதாகிறது. நமக்கு எது வேண்டும் என்று அவருக்கே தெரியும் என்று விடுவதுதான் புத்திசாலித்தனம்.

—ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்



● திருமணமான புதிதில் எங்கள் சின்னக் காரியத்துக்கும் போட்டாபோட்டிதான். உனக்கு இவ்வளவு பிடிவாதம் இருந்தால் ஆண் பிள்ளைக்கு எவ்வளவு இருக்கும்என்ற வீராப்பு வேறு. கோபத்தில் நான் பாத்திரங்களை டங், ணங் என்று ஓசைப்படுத்தினால்பதிலுக்கு அவர் மேஜை நாற்காலிகளைத் தடார் புடார் என்று சத்தப்படுத்துவார். வாய்ச் சண்டையில் வயிற்றைக் காயப்போட்ட வேளைகள் தான் எத்தனை!

இப்போது நினைத்தால் ஒரு பக்கம் சிரிப்பாகவும் எங்கள் அறியாமையை நினைத்து வெட்கமாகவும் உள்ளது.

வாழ்க்கை என்ற வண்டியில் பூட்டப் பட்டுப் பழகிவிட்டதால் தற்போது மாடுகள் ஒற்றுமையாகவே செல்கின்றன. விட்டுக் கொடுப்பதில்தான் சுகம் என்றும், பொறுமை தான் அழகு என்றும் உணர்ந்து கொண் டோம். ஒரு குழந்தைக்குப் பெற்றோராக இருப்பதால் பொறுப்புடன் நடந்துகொள் கிறோம். ஆண்டுகள் ஏழு பூர்த்தியானாலும் நாட்கள் என்னவோ குறைவானதாகவே ஆனது போல் உணர்கிறோம்.

—கலா ராஜேந்திரன்

# ஏழாண்டு இல் வாழ்க்கை

● இப்போதுதான் ஹனிமூன் போய்வந்தது மாதிரி இருக்கிறது. அதற்குள் ஏழாண்டு மண வாழ்க்கை முடிந்து விட்டதா? காலம்தான் எவ்வளவு விரைவாக ஓடுகிறது? பக்கத்தில் இருக்கும் எங்களின் இரண்டு சின்னஞ் சிறிய மழலைகள் தங்கள் கண்களை மலர்த்தித் தாங்கள்தான் எங்களின் ஏழாண்டு மண வாழ்க்கையின் அன்பார்ந்த பரிசுகள் என் பதைச் சொல்லாமல் சொல்கின்றன.

குழந்தைகள் பிறந்த பின்புதான் எங்களின் நெருக்கம் அதிகமாகி இருப்பதாக உணர் கிறேன். கல்யாணம் ஆன புதிதில் எப்பொழுது பார்த்தாலும் 'லொட லொட' வென்று வெகுளித்தனமாக எல்லா விஷயங் களையும் நானே சொல்லிக் கொண்டிருப்பேன். என் கணவர் எல்லா விஷயங்களையும் கேட் பார். 'கமெண்ட்' ஒன்றும் சொல்ல மாட் டார். ''எப்போ பார்த்தாலும் நானே பேசவேண்டி யிருக்கு. நீங்க ரொம்ப அழுத் தம்'' என்று கோபப்படுவேன். இப்போ தெல்லாம் என்னிடம் மனம் திறந்து நிறைய விஷயங்களைப் பேசுகிறார். கலந்து ஆலோ சிக்கிறார். அவரின் இந்த மாறுதலைக் கண்டு உளம் மகிழ்கிறேன்.

திருமணம் முடிந்து பெங்களூர் போன புதிதில் பூ கூட ஆசையாக வாங்கித் தரத் தெரியாது அவருக்கு. சினிமாவைப் பார்த் துப் பார்த்துச் சினிமாவில் வரும் நாயகன் மாதிரி இவரும் நம்மைக் கொஞ்சிச் சீராட்ட வேண்டும் என்றெல்லாம் நினைத்துக் கொள் வேன் நான். வருடங்கள் செல்லச் செல்ல, என் ஆசைகளைப் புரிந்து கொண்டு எப் போது வெளியில் போய்விட்டு வந்தாலும் குழந்தைகளுக்கும் எனக்கும் கை நிறைய ஏதாவது வாங்கிக் கொண்டு வர மறப்பதே இல்லை. சாக்லேட்தான் என்றால் கூட உல கமே கிடைத்துவிட்டது போல் பூரித்துப் போய்விடுவேன்.

முன்பெல்லாம் எங்காவது வெளியூர் போக வேண்டும் என்று கேட்டால் 'போய்ட்டு வா' என்று உடனே பர்மிஷன் கொடுத்தவர் இப் போது. ''எனக்கு போர் அடிக்குமே நீங்கள் இல்லாமல்! அவசியம் போக வேண்டுமா? சீக்கிரம் வந்துவிடு'' எனக் காதோரத்தில் கிசுகிசுக்கும்போது, அந்த நெருக்கத் தில், அந்த இதத்தில் மெய்மறந்து நிற்பேன்.

கல்யாணம் ஆன புதிதில் விதம் விதமாக டிரஸ் செய்துகொண்டு என்னதான் அப்ரைஸ் ஸாக நின்றாலும் ஏறெடுத்துக்கூடப் பார்க்க மாட்டார். வருத்தமாக இருக்கும் எனக்கு. இப்போதெல்லாம் என் புடவைகளை செலக் ஷன் செய்வதுகூட அவர்தான். ''காஸ் முன்னால் நைலக்ஸ் புடவை கட்டிக்கொண்டு சமைக்காதே'', ''இந்தத் தீபாவளிக்கு உனக் குப் பாலியஸ்டர் புடவை நான் வாங்கப் போகி றேன்'' — இப்படி ஒவ்வொரு விஷயத்திலே யும் அவரும் பங்கு கொள்வது எங்கள் நெருக் கத்தை அதிகப்படுத்துகிறது.

அவரின் இந்த மாற்றங்கள் காலத்தினால் ஏற்பட்டதா அல்லது குழந்தைகளிடம் ஏற் பட்ட ஈடுபாட்டாலா அல்லது என்னை முழு மையாகப் புரிந்து கொண்டு விட்டதாலா எதுவென்று சொல்லத் தெரியவில்லை எனக்கு. இன்றும்எங்கள் உறவினர்களும், நண்பர்களும் எங்கள் இருவரையும் 'லவ் பேர்ட்ஸ்' என்று தான் குறிப்பிடுவார்கள். என் குழந்தை களுக்கு அப்பா என்றால் உயிர். எனக்கும் அவர்தான் எல்லாம். ஏழாண்டுகள் என்ன, எழுபது ஆண்டுகள் ஆனாலும் நாங்கள் இப் படியே 'லவ் பேர்ட்ஸ்'ஸாக இருக்க வேண் டும் என்றே விரும்புகிறேன். —காந்தி மோகன்

✖ மழலைச் செல்வத்துடன் காந்தி-மோகன்




அமேதியிலே நமக்கு ஹனிமூன்!... வாங்க...
சௌக்யமா போயிட்டு வாப்பா!
அரசியல்
ராஜீவ்


குழந்தைகளைக் கவனிக்காமெ நீயே சாப்பிட்டுட்டு உன் உடம்பையும் ஏகமா கொழுத்துக்கிட்டிருக்கே!
உற்பத்தித் திறன்
லாபநோக்கு
அரசுத்துறை நிறுவனங்கள்
ஆட்சி


எல்லாம் அந்த தி.மு.க. ஆட்சியிலே நடந்த கோளாறு தான்! இன்னைக்கும் அதிகாரிங்க எல்லாம் சரியாவே நடந்துக்கமாட்டேன்குறாங்க!

# நில்லுங்கள், இளைஞரே!

நில்லுங்கள் இளைஞரே! எங்கே இவ்வளவு அவசரமாக? பட்டம் பெறச் செல்கிறீரா? வேலை வாய்ப்பை நாடிப் போகிறீரா? எதிர்கால இந்தியாவை நிர்மாணிக்க விரைகிறீரா? அல்லது ஒருவேளை சினிமாவுக்கு நேரமாகிவிட்டது என்றுதான் அவசரப்படுகிறீரோ?

எப்படியானாலும் சரி, சற்று நிதானித்துத் திரும்பிப் பாருங்கள். சென்னை, தொரப்பாக்கம் D. B. ஜெயின் கல்லூரியில் நடந்துள்ள அக்கிரமத்தைச் சற்று நோக்குங்கள்! இரும்புத் தடிகள், கழிகள், கற்கள், இவற்றை ஆயுதங்களாகக் கொண்டு மாணவர்கள் கல்லூரியின் கண்ணாடி ஜன்னல்கள், மோட்டார் வாகனங்கள், வாஷ் பேஸின்கள் முதலியவற்றைச் சுக்கு நூறாக்கியிருப்பதைப் பாருங்கள்! உடைந்த ஜன்னல்களுக்கு எதிரே நாற்காலிகளைக் குவித்து ஆசிரியர்கள் தங்களைத் தற்காத்துக் கொள்ள நேர்ந்ததை உணருங்கள். இந்த ஆர்பாட்டங்களின் விளைவாகப் பரீட்சைகள் ரத்தாக, பல மாணவர்கள் மறுபடி டிசம்பரில் பரீட்சை எழுத நேர்ந்துள்ளதையும் வேறு பலர் வாழ்நாளின் ஓர் ஆண்டு முழுவதையும் அடியோடு இழந்து விட்டிருப்பதையும் புரிந்து கொள்ளுங்கள்!

எதற்கு இந்த அமர்க்களம் தெரியுமா? பரீட்சையில் இவர்களைக் காப்பி அடிக்க அனுமதிக்க வில்லையாம்! அதற்காகத்தான்.

இளைஞரே! D. B. ஜெயின் கல்லூரியில் இப்படி நடந்துகொண்ட மாணவர்களை நீங்கள் தட்டிக்கேட்கப் போகிறீரா? இல்லை, நமக்கென்ன வந்தது என்று ஒதுங்கப் போகிறீரா? அல்லது நமக்கும் கலாட்டா பண்ண ஒரு வாய்ப்பு கிடைக்கும் என்ற நம்பிக்கையோடு நகரப் போகிறீரா?

கேளுங்கள் இளைஞரே! சுதந்திரம் பெற்று இதோ 34 ஆண்டுகள் முடியப் போகின்றன. இன்னமும் இந்த நாட்டின் கோடானுகோடி மக்களுக்கு விடிவு காலம் பிறக்கவில்லை. ஒரு தலைமுறையும் அதற்கு அடுத்த தலைமுறையும் ஆட்சியில் அமர்ந்திருந்தும் பயனில்லை. தீர்க்க தரிசனமின்றித் தேச மக்களின் நலனை உத்தேசியாமல் தங்கள் பதவியை ஸ்திரப்படுத்திக் கொள்வதிலேயே காலம் கடத்தி விட்டார்கள். அடுத்த தலைமுறையினரான நீங்களேனும் — படித்த இளைஞர்களான எல்லோரும் — பொறுப்பேற்று இந்த நாட்டை உயர்த்துவீர்கள் என்று நம்பிக் கொண்டிருக்கிறோம். ஏமாற்றமளித்து விடாதீர்கள்!

இளைஞரே யோசியும்! காப்பி அடிக்க அனுமதிக்கவில்லை என்று அட்டூழியம் செய்திருக்கிறார்களே, இவர்களுக்குக் காப்பி அடிக்க அனுமதி தந்துவிட்டால் எல்லாம் சரியாகப் போய்விடுமா? நாளை கறுப்பு கோட்டும் தொப்பியும் அணிந்து பட்டம் வாங்கும்போது கை கூசாதா? பட்டத்தை ஃபிரேம் போட்டு மாட்டி வைத்தால் அதைப் பார்க்கும் போதெல்லாம் பெருமிதத்தில் நெஞ்சு நிமிருமா அல்லது வெட்கத்தில் தலை குனியுமா? 'நியாயமான கோரிக்கைகளுக்குக் கூட கிளர்ச்சி கூடாது; பேச்சு வார்த்தைகள் நடத்த வேண்டும்' என்று நாகரிகம் கற்றுத் தர வேண்டிய மாணவர்களே அதர்மமான விஷயத்துக்கு ஆர்ப்பாட்டம் செய்வதா?

மறுநாள் குரோம்பேட்டையில் ரௌடிகள் செய்த அட்டகாசத்தைப் பற்றிப் படித்தீர்களல்லவா? ஒரு பாவமும் அறியாத பதினைந்து பேருக்குக் கத்திக் குத்து! இந்த அக்கிரமத்தில் இறங்கிய அவர்களாவது ஊர் அறிந்த ரௌடிகள், குண்டர்கள். ஆனால் D. B. ஜெயின் கல்லூரியில் அத்து மீறி நடந்தவர்கள் உயர் கல்விபெற்ற கனவான்களாயிற்றே!

இளைஞரே! உமது தோழர்களுக்குச் சொல்லுங்கள்: ''படிக்க வேண்டிய காலத்தில் படிப்போம். கூடவே தேசப் பிரச்னைகளைக் கவனிப்போம். தீர்வுகாண வழி வகைகளை ஆராய்வோம். தலைவர்களிடம் கூறுவோம். அவர்கள் அலட்சியம் செய்தால் மக்கள் மன்றத்தில் வைப்போம். ஒரு விவசாய, தொழில், வர்த்தகப் புரட்சியை உருவாக்குவோம். மகோன்னதமான நிலைக்குத் தேசப் பொருளாதாரத்தை உயர்த்தப் பாடுபடுவோம்'' என்று கூறுங்கள்! பாரத பூமி பழம் பெரும் பூமி; நீரதன் புதல்வர்; இந்நினைவகற்றாதீர்!



கல்கி

1981 மே 24

துன்மதி வைகாசி 11

மலர்: 39 இதழ்: 43



தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற எங்கள்
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்

# ரிலையன்ஸ்

கடந்த காலம் முழுவதும் 2 லட்சத்திற்கும் அதிகமான
பங்குதாரர்கள் மற்றும் டிபஞ்சர்—வைத்திருப்பவர்களுக்கு மிகவும்
நன்மைகள் நிறைந்த காலம்

டிபஞ்சர்
வரிசை I
1979 அக்டோபரில்
ஒவ்வொன்றும்
ரூ. 500க்கு
வெளியிடப்பட்டன.
19 மாதங்களில்
அவை ரூ. 487
(97%) ஆதாயம்
தந்து விட்டன.

டிபஞ்சர்
வரிசை II
நவம்பரில் 1980
ஒவ்வொன்றும்
ரூ. 125க்கு
வெளியிடப்பட்டன
இந்த உரிமை
டிபஞ்சர்கள்
முன்னமேயே
ரூ. 160க்கு மதிப்
பேற்றம் பெற்றுவிட்டன.

எதிர்காலம் இன்னும் ஒளிமயமாக இருக்கும்.

## இப்போது ரிலையன்ஸ் டெக்ஸ்டைல்ஸ் அறிவிக்கும் 13.5% மாற்றக்கூடிய முழுவதும் பாதுகாப்புள்ள டிபஞ்சர்கள்

டுபான்ட், அமெரிக்காவின் தொழில் நுட்ப கூட்டுறவுடன் அமைக்கப்படவிருக்கும்
ஆண்டுக்கு 10,000 டன் உற்பத்தி செய்யும் பாலியெஸ்டர் ஃபிலமெண்ட்
இழைத திட்டத்துக்கு பகுதியாக 79.50 கோடி ரூபாய் நிதி உதவி ஏற்படுத்துவதற்கு
ரிலையன்ஸ் டெக்ஸ்டைல்ஸ் விரைவிலேயே பொது மக்களுக்கு
ஒவ்வொரு டிபஞ்சரும் ரூ. 125-, மொத்தம் ரூ. 24 கோடி, மதிப்புள்ள மாற்றக்
கூடிய முழுவதும் பாதுகாப்புள்ள டிபஞ்சர்களை வழங்கப் போகின்றனர்.

# டிபஞ்சர்கள்

## ...ங்கள் ஏன் முதலீடு செய்யவேண்டும் என்பதற்கு 7 காரணங்கள்.



**1** **முழுக்க முழுக்கப் பாதுகாப்பு:** இந்த டிபஞ்சர்கள் கம்பெனியின் நிலையான சொத்துக்களுக்கெதிராக முழுவதும் பாதுகாப்புடையவை.

**2** **எளிதில் ரொக்கமாக மாற்றிக் கொள்ளமுடியும்:** இந்த டிபஞ்சர்கள் பம்பாய், அஹமதாபாத், டெல்லி, கல்கத்தா, சென்னை மற்றும் பெங்களூரிலும் பங்கு மாற்று நிலையங்களில் பட்டியலில் பதிவு செய்யப்பட்டுள்ளன.

**3** **நிலையான வருமானத்துக்கு உத்தரவாதம்:** ஆண்டு ஒன்றுக்கு 13.5%

**4** **மதிப்பேற்றம்:** 1982 ஆகஸ்டு 31ந் தேதி ரூ. 25 மதிப்புள்ள டிபஞ்சர் ஒன்றுக்கு ஒரு ஈக்விட்டி பங்கை ஒதுக்குவதால் (தற்போதைய மார்க்கெட் விலை ரூ. 95 ) முதலீடு செய்பவருக்கு மூலதனத்தின் மதிப்பேற்ற நன்மை கிடைப்பதோடு நிறுவனத்தின் எதிர்கால வளமையில் பங்கு ஏற்கும் வாய்ப்பும் உண்டாகிறது.

**5** **கொழுத்த ஆதாயம்: 54% அல்லது அதற்கு மேலும்:** ஒதுக்கும்போது பங்கின் விலை ரூ. 100 - என்று வைத்துக் கொண்டால், முதலீடு செய்பவரின் நிகர முதலீடு டிபஞ்சர் ஒன்றுக்கு ரூ. 25 மட்டுமே. மாறாக அவருக்கு தொடர்ந்து ரூ. 100 மீது வருட வட்டி ரூ. 13.50 அதாவது 54% கிடைக்கும். பங்குகளின் விலை அதிகமானால் கிடைக்கும் ஆதாயமும் அதிகம். அத்துடன் முதலீடு செய்பவர் மீட்கும்போது அசல் தொகையான ரூ. 100 வரி இல்லாமல் அப்படியே பெறுவார்.

**6** **போனஸ்:** கம்பெனியின் ரிசர்வ்களும் போனஸ் வெளியீட்டின் தற்போதைய வழிகாட்டி முறைகளும் 1982ல் போனஸ் பங்குகளை அறிவிப்பதற்கு கம்பெனிக்கு உதவும். அப்படி அறிவிக்கப்பட்டால் ஒதுக்கப்படவிருக்கும் ஈக்விட்டி பங்குகளின் எண்ணிக்கை அதிகமாக்கப்படும்.

**7** **கடந்த காலம் பல நன்மைகளை உடையது**

| வெளியீடு | மதிப்பேற்றம்/ஆதாயம் (ஏப்ரல் 1981 வரை) | வழங்கப்படும்போது பங்கின் விலை | தற்போதைய பங்கின் விலை (ஏப்ரல் 1981) |
|---|---|---|---|
| ஈக்விட்டி பங்குகள் நவம்பர் '77 ஒவ்வொன்றும் ரூ. 10 | 42 மாதங்களில் 1155% மதிப் பேற்றமும் ரூ. 11.37 டிவிடெண்டும் | ரூ. 10 | ரூ. 95 |
| டிபஞ்சர் வரிசை-I அக்டோபர் '79 ஒவ்வொன்றும் ரூ. 500 | 19 மாதங்களில் ரூ. 487 (97%) | ரூ. 55 | ரூ. 95 |
| டிபஞ்சர் வரிசை-II நவம்பர் '80 ஒவ்வொன்றும் ரூ. 125 | 6 மாதங்களில் மதிப்பேற்றம் ரூ. 160 அத்துடன் ஆண்டு ஒன்றுக்கு 12% வட்டி | ரூ. 65 | ரூ. 95, 31.12.1981ல் மாற்றிக் கொள்ளலாம் |
| தற்போதைய டிபஞ்சர் வெளியீடு ஒவ்வொன்றும் ரூ. 125 | 13.5% வட்டி ஆண்டு ஒன்றுக்கு | ரூ. 95 | ரூ. 95 - 31.8.1982 போது ஒரு பங்கு ஒதுக்கல் |

இப்போதுள்ள பங்குதாரர்கள், வரிசை I மற்றும் வரிசை IIன் டிபஞ்சர்களை வைத்திருப்பவர்கள், கம்பெனியில் டெபாசிட் வைத்திருப்பவர்கள் முன்னுரிமை அடிப்படையில் இந்த டிபஞ்சர்கள் வழங்கப்படுவார்கள்.

VIMAL
A RELIANCE PRODUCT

**ரிலையன்ஸ் டெக்ஸ்டைல் இண்டஸ்ட்ரீஸ் லிமிடெட்**

பதிவு அலுவலகம்: கோர்ட் ஹவுஸ், திலக் மார்க், தோபிதலாவ், பம்பாய் 400 002.

...ளர்ச்சியையே வாழ்க்கை முறையாகக் கொண்ட நிறுவனத்தில் முதலீடு செய்க.

வெளியீடு
10-6-1981

At every hour's distance one sees, a choultry erected by private persons They are all the accomodation to be met on the roads. Building a choultry is looked upon as a great act of charity Major John Corneille-1754

## 8

ட்ரேக் ராஜர் என்ற அந்த இளைஞன் பரிதாபமாகப் படுத்திருந்தான்.

அவன் மூக்கிலிருந்து சிவந்த ரத்தம் ஒழுகியது. முகத்தில் பொட்டு வியர்வைகள் வழிந்தன. கண்களை அரை விநாடி திறந்திருக்க முடியவில்லை. ஆஆ என்று முனகியவாறு படுக்கையில் துவைத்தான்.

சுவர்ணமுகி அவனை ஆழ்ந்து பார்த்தாள். அவளுக்கு வருத்தம் மேலிட்டது.

யார் இந்த இளைஞன்? என்னை ஏன் விலைக்கு வாங்கினான்? இவனுக்கும் எனக்கும் சம்பந்தம் என்ன? அதிசயமாக இருக்கிறதே! என்று நினைத்தாள்.

ராஜர் மேலும் பலமுறை புரண்டுவிட்டு ஒரு சந்தேக அமைதிக்கு வந்தான். தன் அருகில் இருப்பவளைப் புதுமையாகப் பார்த்தான்.

ஒரு சின்ன நடுக்கம் உடல் மீது ஓடியது.

அக்கம் பக்கம் பார்த்து மிகவும் மெதுவாக அவளை நோக்கித் தணிந்த குரலில் ''நீங்க ராஜ குமாரிதானே?'' என்றான்.

சுவர்ணமுகி திகைத்தாள்.

இவனுக்கு என்னைத் தெரியுமா?

எங்கே பார்த்திருக்கிறான்?

குரல் பரிச்சயமாகத் தெரிகிறதே!

அவள் பேசாததைக் கண்டு அவன் மேலும் தொடர்ந்தான். ''உங்களுக்கு நாராயண வனம்தானே?''

சுவர்ணமுகிக்கு அதற்கு மேல் அடக்க முடியவில்லை. ஆமாம் என்பதற்கு அடையாளமாகத் தலையை ஆட்டினாள்.

''உங்கள் அப்பா பெயர்ரங்கப்பாதானே?''

''ஆமாம்.''

''என்னைத் தெரிகிறதா?''

''இல்லையே!'' என்றாள் சுவர்ணமுகி.

''நான் உங்கள் வேங்கட கிருஷ்ண விலாசத்துக்கு வந்திருக்கிறேன். உங்கள் தந்தை யாருக்கு ரகசியமாக டெலிஸ்கோப் வாங்கிக் கொடுத்தேன். அவர்என்னிடம் பல ரகசியங்களைப் பற்றிப் பேசினார்'' என்றான்.



# சுவர்ணமுகி

ஸ்ரீவேணுகோபாலன்

சுவர்ணமுகிக்குச் சட்டென்று நினைவு வந்தது. வேங்கடகிருஷ்ண விலாசத்திற்கு எத்தனையோ வியாபாரிகள் வந்து போவார்கள். அவர்களில் ராஜர் ஒருவன் என்று இப்போது பளிச்சிட்டது.

ராஜர் சொன்ன கருவியையும் அவள் ரங்கப்பாவிடம் பார்த்திருக்கிறாள்.

அதிசயமான கண்ணாடிக் கருவி அது. குழாய் போல இருந்தது. கண்ணில் வைத்துப் பார்த்தால் தூரத்து உருவங்கள் மிக நெருக்கத்தில் தெரிந்தன. நகரி மலையின் மூக்கு அவள் கை எட்டலுக்கு அகப்பட்டது. சந்திரகிரி அரண்மனை இதோ நாலு எட்டு நெருக்கத்தில் இருந்தது.

என்ன அதிசயமான கருவி!



ரங்கப்பா அதை 10,000 பணம் கொடுத்து வாங்கியிருந்தார்.

''இப்போது ஞாபகம் வருகிறது. அந்த டெலஸ்கோப் ஒரு நூதனமான கருவி'' என்று பிரமிப்புடன் சொன்னாள்.

''சத்தம் போட்டுச் சொல்லாதீர்கள். டச்சுக்காரன் காதில் பட்டால் என்னைத் தூக்கில் போட்டுவிடுவான்!'' என்றான் அவன், அக்கம் பக்கம் பார்த்து.

''ஏன் அப்படி?''

''அந்தக் கருவியை யுத்த களத்தில் பயன்படுத்துவார்கள். அதனால் கிழக்கு நாடுகளில் அதை விற்கத் தடை உண்டு. நான் உங்கள் தந்தைக்கு அதை ரகசியமாக விற்றேன். துப்பாக்கிகளும் விற்றிருக்கிறேன். உங்கள் தந்தை என்னை ஒரு கூட்டாளியாக நினைத்தார். என்னிடம் இன்னும் நிறைய உதவிகள் எதிர்பார்த்தார். திம்மராஜாவை எப்படியும் ஒடுக்கிவிட வேண்டும் என்று அவர் ஆசை!''

சுவர்ணமுகியின் கண்கள் நீரிட்டன.

''என் தந்தை இறந்து விட்டார் தெரியுமா?''

''தெரியும். அதனால்தான் நான் வெறுப்பில் ஊருக்குக் கிளம்பி விட்டேன்.'' என்று சொன்ன ராஜர், ''அவர் என்னிடம் என்னவெல்லாம் ரகசியம் பேசினார். விஜயநகரப் பொக்கிஷத்தைப் பற்றிக்கூட என்னிடம் பேசினார்'' என்றான்.

சுவர்ணமுகிக்கு உறைத்தது.

''அதையெல்லாம் பேசினாரா?''

''ஆமாம், இளவரசி! நான் அவருக்கு அந்தரங்க ஆளாக மாறிவிட்டேன்.''

சுவர்ணமுகிக்கு ஆச்சரியமாக இருந்தது. இந்த இளைஞனிடம் ரங்கப்பா அவ்வளவு நம்பிக்கை வைத்திருந்தாரா?

உள்ளே சலசலப்புக் கேட்டது.

அறுபது வயதான வைத்தியர் ஹோம்ஸ் கையில் ஒரு பேப்பர் குழாயுடன் வெளியே வந்தார்.

ராஜரைப் பார்த்து முறு முறுத்து, அவன் மார்பில் குழாயை வைத்து, மறு ஓரத்தில் தமது காதை வைத்து இதயத் துடிப்பினைக் கேட்டார்.

''டோண்ட் வொர்ரி!'' என்று சொல்லி அவனை உள்ளே அழைத்துப் போகச் சொன்னார்.

இருவர் அவனை உள்ளே தூக்கிப் போக சுவர்ணமுகிக்குக் கையை ஆட்டியவாறு அவன் உள்ளே போனான்.

அர்ச்சுனனுக்கு ஆச்சரியமாக இருந்தது.

இந்தப் பைராகிகள் யார்?

இந்தச் சத்திரத்துக்கு எப்படி வந்தோம்?

எப்படி இன்னும் உயிருடன் இருக்கிறோம்?

அவனுக்கு நம்பிக்கை இல்லை. அவர் கண்ணைக் கொட்டக் கொட்டப் பார்த்தான்.

நிச்சயம் இது பகல் வேளைதான்!

அவன் இருப்பது ஒரு சத்திரம்தான்.

இந்தச் சாளரத்தின் வழியே வருவது காலையின் வெள்ளி ஒளிகள்தான்!

பிழைத்தோமா?

திரும்பிப் பார்த்தான்.

முதுகில் சட்டி குத்தியது. ஓகோ! ரணம் இன்னும் இருக்கிறதா! காயம் ஆறவில்லை. தோதா கொடுத்த ஞாபகச்சின்னம். துரோகி!

மேலே உத்தரங்களையும் விட்டங்களையும் பார்த்த போது பழக்கப் பட்டவையாகத் தோன்றின. இது எந்தச் சத்திரம்?

நிழல் ஒன்று அவனைப் பார்த்து நீண்டு வர, தலையை மட்டும் திருப்பினான்.

கருணையை விழியாகக் கொண்ட. ஒரு காவி வஸ்திரதாரி அவன் முன்னால் வந்து உட்கார்ந்தார். நெற்றியில் கோபியால் நாமம் போட்டிருந்தார். அன்பு மயமான புன்னகையுடன் அவன் பக்கத்தில் உட்கார்ந் தார்.

''சுவாமி!'' என்றான் அவன்.

''விழித்து விட்டீர்களா? விட்டலன் அருள்'' என்றார் அவர்.

''நாம் எங்கிருக்கிறோம் சுவாமி?'' என்றான் அவன்.

## ஒரு கேள்வி, ஒரு பதில்!

# கமிஷன்,

எரிசாராய ஊழல் நடந்ததாகக் கூறப் படுவதையொட்டி விசாரணைக் கமி ஷன்கள் அமைப்பது பற்றியொரு கேள்விக்கு பதிலளிப்பவர் பிரபல அரசியல் சட்ட நிபுணர் திரு ஜி. ராமசாமி.

கேள்வி: எரி சாராயத்தைக் கேரளாவுக்கு அனுப்புவதில் ஊழல் நடந்ததாகக் கூறப் படும் குற்றச்சாட்டை விசாரிக்க மாநில அரசு கமிஷன் அமைத்திருக்கிறது. இதே விஷயத்தைப் பற்றி மத்திய அரசும் கமிஷன் அமைத்து விசாரிக்கச் சட்டம் இடம் கொடுக் கிறதா?

பதில்: ஒரு பிரச்னையைப் பற்றி விசாரிக்க மாநில அரசு விசாரணைக் கமிஷன் ஏற்படுத் தும்போது, மத்திய அரசும் அதே விஷயத்தை பற்றி விசாரிக்க மற்றொரு கமிஷன் அமைப் பதைச் சட்டம் தடுக்கவில்லை. விசாரணைக் கமிஷன் சட்டம், பிரிவு மூன்றின்படி, மத்திய அரசும் கமிஷன் அமைக்கலாம். அப்படி மத்திய அரசு ஒரு கமிஷன் ஏற்படுத்தும் பட்சத்தில் மாநில அரசு அமைக்கும் கமிஷன் அதன் அதிகாரத்தைத் தானாகவே இழந்து விடும். இதனால் இரண்டு விதமான முடிவுகள் வருவதற்கு வாய்ப்பில்லை.

பேட்டி: ப்ரியன்

# எத்தனை கமிஷனடி?



அவர் விருத்தாந்தங்களைச் சொன்னார். திருப்பதிக்கு அவரும் அவரது சாது கோஷ்டி யும் யாத்திரை வந்தது. வரும் வழியில் அவன் குற்றுயிராகக் கிடப்பதை அவர்கள் பார்த்தது. டோலியில் ஏற்றிச்சத்திரத்திற்குக் கொணர்ந்தது. அவன் காயத்துக்குச் சிகிச்சை செய்தது. அவனுக்காகவே இரண்டு வாரம் அங்கேயே தங்கிவிட்டது....

எல்லாவற்றையும் விவரத்தோடு சொல்லி முடித்தார்.

அர்ச்சனன் தனது விருத்தாந்தத்தைச் சுருக்கமாகச் சொல்ல,

''அப்பா அர்ச்சனா! நல்ல வேளையாக அன்று உனக்கு நினைவு திரும்பியது. நாங்கள் இந்த இடத்தை விட்டுப் போவதாக இருக்கிறோம். இங்கே கொடிய பஞ்சம் தாண்டவமாடு கிறது. அரிசியோ வேறு தானியமோ கிடைக்க வில்லை. அபூர்வமாகக் கிடைத்தாலும் கொள்ளை விலைக்கு விற்கிறது. இனி நாங்கள் இங்கே இருக்கக் கூடாது. உன்னை என்ன செய்வது என்று தெரியாமல் திண்டாடு கிறோம்'' என்றார் அந்த விட்டல சந்நியாசி.

''சுவாமி!'' என்று சொல்லி அவரை நன்றியுடன் பார்த்தான் அவன். ''நான் இனிப் பிழைப்பேனா? என் காயங்கள் குண மாகுமா? அதைச் சொல்லுங்கள்!'' என்றான் கெஞ்சிக் கொண்டு.

''அப்பா அர்ச்சனா! உன்னைக் கண்டெடுத்தது முதல் மூன்று நாள் வரை எங்களுக்கு நம் பிக்கை இல்லை. அதன் மேல்தான் நம்பிக்கை துளிர்த்தது. உன்னைக் குற்றுயிராக விட்டுப் போக மனமில்லாமல் எங்கள் வழக்கத் தையும் மீறி இங்கே இரண்டு வாரம் தங்கி விட்டோம். உன் காயம் குணமாகி வரு கிறது. நிச்சயம் நீ பிழைத்து விட்டாய்!'' என்றார் விட்டல சந்நியாசி.

''பிழைத்தேனா சுவாமி!'' என்று அவர் கையைப் பிடித்தான் அர்ச்சனன். ''அது போதும் சுவாமி! என் ஒரே ஆசை அதுதான். உதவிகளுக்கு மிக்க நன்றி உடையேன், சுவாமி! எனக்கு ஒரே ஒரு உதவி செய்யுங்கள். ஒரு பல்லக்கு எங்கேயாவது கிடைக்குமா பாருங்கள். அது போதும். நான் எப்படி யாவது பிழைத்துக் கொள்வேன்!'' என்றான் அவன்.

விட்டல சந்நியாசி வெளியே போனார். பல நாழிகை தேடிய பின்னர்தான் பல்லக்கு கிடைத்தது.

சத்திரத்து வாசலில் கொண்டு இறக்கி யது. சந்நியாசி உள்ளே போய் அர்ச்சன னிடம் தெரிவித்து, அவனை மெள்ள அணை வாக இருவர் உதவியுடன் தூக்கி, பல்லக்கில் கொண்டு விட்டார்.

வெளியில் வந்து முகப்பைப் பார்த்ததும் அது காசங்குளச் சத்திரம் என்று தெரிந்தது. அங்கிருந்து நாராயணவனம் நாலு நாழிகை யில் இருந்தது.

நான்கு பங்கு அதிகமான ஊதியத்துக்கு இணங்கிய பிறகே பல்லக்குப் புறப்பட்டது.

தீப் பிழம்பாகத் தகிக்க நிலங்கள் தெரியப் போகிகள் வழக்கத்துக்கு மாறாக மிக மெதுவாக நடந்தார்கள்.

அர்ச்சனன் யோசித்தவாறே சென்றான்.

தோதாவின் நினைவு அடிக்கடி வந்தது. அவனது முதுகுக் காயத்தை விட வலித்தது.

அடிக்கடி பல்லைக் கோபத்தோடு அரைத்தான்.

நாட்டை இவனைப் போன்ற துரோகிகள் எவ்வளவு சீர்குலைத்து விட்டார்கள்!

சுபிட்சம் நிறைந்த பூமியைக் கைம்பெண்ணாக ஆக்கி விட்டார்களே!

தோதா! உன்னை.....

அந்தப் பெண் தப்பினாளா? சுவர்ணமுகி!

அவள் யார் என்று கூடப் பார்க்கவில்லை.

அவளுக்காகத்தானே இந்த யுத்தமே நடந்தது!

அவள் இப்போது தப்பி யிருப்பாளா?

அவன் உடல் நடுங்கியது.

தோதா நயவஞ்சகமாக அவள் போன திசையைக் கேட்டுவிட்டுப் போனானே! அவளைக் கண்டுபிடித்துக் கொலை செய்திருப்பானோ?

என்ன இருந்தாலும் அவளை நேரில் பார்க்காதது எவ்வளவு தவறு?

அந்தச் சேடி காஞ்சனா தான் பேசினாள்.

அவளுக்கு என்மீது என்ன கரிசனம்?

என்னை அன்பாக விசாரித்து, நிழலில் கொண்டு போய்ச் சேர்த்து...

மதியமாவதற்குள் நாராயணவனத்தை அடைந்தான் அவன்.

வேங்கடகிருஷ்ண விலாசத்தை அடைந்த போது, அவன் இதயம் படக்கென்று நின்றது.

இதென்ன அநியாயம்?

வீடா அல்லது பாழா?

யார் இதைச் சூறையிட்டார்கள்? ரங்கப்பாவின் குடும்பம் எங்கே? சுவர்ணமுகி எங்கே?

பல்லக்கை உள்ளே கொண்டு போகச் சொன்னான். தோட்டத்தின் வழியாக வீடு முழுவதையும் பிரதட்சிணம் வந்தான். மனத்தின் ஒரு கடினப் பகுதி விரைவாகக் கரைந்தது. பளிங்கு நீர்கள் கண் விளிம்பில் துளிர்த்து நின்றன.

பூவும் பிஞ்சுமாக இருந்த வீடு!

என்ன கோரமாக மாற்றி விட்டார்கள்?

தோதா வேலையா இது?

''ஐயா!'' என்று குரல் கேட்கத் திரும்பினான். நொண்டிக்கொண்டே அந்த

சென்ஸஸ் அதிகாரி: ''போன தடவை சென்ஸஸ் எடுக்க நான் வந்த போது உங்க வயது இருபதுன்னு சொன்னீங்க இப்பொழுது பதினாறு என்கிறீர்களே?''

நடிகை: ''முன்னே நான் எக்ஸ்ட்ரா நடிகை, இப்பொழுது கதாநாயகியாச்சே.....!''

எஸ். பானு



மலைப்பெண் பூங்கரு அவன் முன்னால் வந்தாள்.

''எல்லோரையும் கொன்னுட்டாங்க!'' என்றாள் துக்கமான குரலில்.

''யாரு?''

''தளவாய் நரசய்யன்!''

''நரசய்யனா?''

''ஆமாங்க.''

அர்ச்சுனன் கண் வழியே கொதி நீர் வழிந்தது.

கைவிரல்கள் திகைப்பில் தாமாக நடுக்கமிட்டன.

அவன் பதற்றத்தில் பல்லக்கு ஆடியது.

மனம் இப்போது நெகிழ, ''எல்லோரும் இறந்தார்களா?'' என்று குரல் தழையக் கேட்டான் அவன்.

''ஆமாங்க!''

முகத்தை மூடிச் சிறிது விசித்தான். பிறகு விம்மிக்கொண்டே, ''யாரும் இந்த அநியாயத்தைத் தடுக்கவில்லையா?'' என்று கேட்டான்.

பூங்கரு மௌனம் சாதித்தாள்.

''பூங்கரு! அவர்கள் உடல்களை என்ன செய்தார்கள்?''

''நாங்கதான் புதைச்சோமுங்க!''

''எங்கே?''

அர்ச்சுனனின் பல்லக்கை அழைத்துக் கொண்டு அருணா ஆற்றுப் படுகைக்குப் போனாள்.

வரிசையாக மேடுகளைக் காண்பித்து, ''இதுதாங்க!'' என்றாள்.

அர்ச்சுனன் சோகத்தோடு அந்த மண் மேடுகளைப் பார்த்தான்.

''இது வேங்கடம்மா, இது சந்திர கிருஷ்ணன், இது திவ்யப் பிரபா, இது...'' என்று சொல்லி நிறுத்தினாள் பூங்கரு.

''யாரு?''

''என் வீட்டுக்காரரு!'' என்று முகத்தை மூடினாள் அவள்.

அவள் மார்புகள் மெல்லத் துக்கத்தில் குலுங்கின. துயரத்தைக் கூடத் தனது அந்தஸ்துக்குத் தக்கபடி மிகக் குறைவாக விளம்பரப்படுத்த விரும்பினாள் அவள்.

அர்ச்சுனன் சில விநாடிகள் அவளது துயரத்தோடு லயித்தான்.

பிறகு, பளிச்சென்று, ''சுவர்ணமுகி?'' என்றான்.

''அவங்க தப்பிச்சுட்டாங்க!''

''தப்பிச்சுட்டாங்களா?'' மகிழ்ச்சி பீறிட வினவினான்.

''ஆமாங்க!''

''எங்கே போனாங்க?''

''பின்னாடி வழியே ஆத்தைக் கடந்து ஓடியிருக்கணும். நரசய்யன் தேடு தேடுன்னு தேடினான்.''

அர்ச்சுனனுக்குப் புது உற்சாகம் வந்தது. பூங்கருவுக்குப் பத்துப் பணத்தைக் கொடுத்தான். பிறகு 'நிச்சயம் சுவர்ணமுகி நாகலாபுரம் போயிருப்பாள். அங்கேதான் அவள் சிநேகிதி இருமலாம்பா இருக்கிறாள்' என்று நினைத்து, போகிகளை நோக்கி, ''நாகலாபுரம் போங்கள்!'' என்றான்.

(தொடரும்)

"நான் ஒரு குடும்பப்பெண்
எனவே நான் உடுத்தும் உடைகள் குடும்பப் பாங்காக இருக்க வேண்டும்."





MF-18 TAM

*உங்கள் அந்தஸ்தே தனி*
*அதற்கேற்ற துணி*

**ம:பத்லால்**
**:பேப்ரிக்ஸ்**

சூட்டிங்குகள், ஷர்ட்டிங்குகள், புடவைகள், மற்றப் துணிகள்
மற்றும் [illegible]

**ம:பத்லால் இண்டஸ்ட்ரீஸ்** நியூ ஷோராக் மில்ஸ் **ம:பத்லால் :பைன்**

அத்தனை பேரும் சொல்லிப் பார்த்துவிட்டார்கள். சபாபதி எதற்கும் அசையவில்லை.

''உன் வாழ்க்கை நல்லா இருக்கணும்னு தானே நாங்க சொல்றோம். யோசிக்காம சரின்னு சொல்லு சபாபதி'' என்று பெரியப்பா ஒரு தடவைக்குப் பத்துத் தடவை ஓதிவிட்டார். அவர் மட்டுமல்ல. மாமா... அத்தை... சித்தி... பெரியம்மா... இன்னும் உறவுமுறை என்று சபாபதிக்கு உருப்படியாய் இருப்பவர்கள் அத்தனை பேரும் திரும்பத் திரும்பச் சொல்லிப் பார்த்து விட்டார்கள். ஊஹூம். சபாபதி தன் முடிவில் பிடிவாதமாகவே இருந்தான். ''இத பாருங்க பெரியப்பா! நீங்க உண்மையிலேயே என் பேரில அக்கறை காட்டறதா இருந்தா இந்த அட்ரஸிலே இருக்கிற பொண்ணை எனக்குக் கல்யாணம் பண்ணி வைக்க முயற்சி பண்ணுங்க. இல்லே... பேசாம விட்டுடுங்க... பிராப்தம் இருக்கறப்ப எனக்குக் கல்யாணம் ஆயிட்டுப் போகுது!'' சபாபதி முகத்தில் அறைந்தாற்போல் பதில் சொல்லிவிடவே பெரியப்பா பேசாமல் அவன் கொடுத்த விலாசத்தை வாங்கிக் கொள்ள வேண்டியதாயிற்று. சபாபதியைப் பெற்றவர்கள் உயிருடன் இல்லை. இரண்டு வருடங்களுக்கு முன் சாகும் தறுவாயில் இருந்தபோதுதான் சபாபதியின் தந்தை தன் அண்ணன் பரமசிவத்தை அழைத்து, சபாபதிக்குக் கல்யாணம் செய்து வைக்கும் பொறுப்பை அவரிடம் கொடுத்துவிட்டு நிம்மதியாகக் கண்ணை மூடினார். பெற்றோருக்கு ஒரே பிள்ளையான சபாபதி ஓரளவு படித்துப் பஞ்சாலை ஒன்றில் குமாஸ்தாவாகக் கைநிறையச் சம்பாதித்துக் கொண்டிருக்கிறான். அவனுக்கு மணம் பேசி முடிப்பது அப்படியொன்றும் பெரிய காரியமில்லை என்று வெகு அலட்சியமாக மணமகள் வேட்டையில் இறங்கிய பரமசிவம், ஓரிரு மாதங்களிலேயே மனம் சலித்துப் போனார். சபாபதி எந்தப் பெண்ணைப் பார்த்தும் 'பச்சைக் கொடி' காட்டவில்லை.

''சபாபதி! உனக்கு நெஜமாகவே கல்யாணம் பண்ணிக்கணும்கிற நெனப்பு இருக்கா? இல்லே, சும்மா பொண்ணைப் பார்த்தே காலத்தை ஓட்டிடப் போறியா? நீ முதல்லே பார்த்துட்டு ஒதுக்கின பொண்ணுக்குக் கல்யாணமாகி இப்ப ஒரு குழந்தை கூட இருக்கு! நீ என்னதான் நெனைச்சுக்கிட்டு இருக்கே?''

பெரியப்பாவின் கேள்வி சபாபதியைச் சங்கடப்படுத்தி விட்டது. நெளிந்தபடியே மெதுவாகத் தன் எண்ணத்தை வெளியிட்டான். ''கோவிச்சுக்காதீங்க பெரியப்பா. எனக்குச் சொத்து, சுகம், சீர், செனத்தி எதுவுமே தேவையில்லே. பொண்ணு ஏழையா இருந்தாலும், ரொம்ப லட்சணமா இருக்கணும். சிவப்பா.. சுண்டினு ரத்தம் வர்றாப்பல... உடம்பு செதுக்கி வச்ச செலை மாதிரி கச்சிதமா...''

அதுக்கு மேல் சொல்லாமல் வெட்கத்தோடு பாதியில் நிறுத்திக் கொண்டான் சபாபதி.

ஒரு நீண்ட பெருமூச்சைப் பதிலாக்கிய பரமசிவம் அதற்குப் பின் சபாபதி குறிப்பிட்ட அம்சங்களுடன் ஏதாவது பெண் இருக்கிறதா என்று பேயாய்த் தேடி அலைந்து போய் விட்டார். கடைசியில் தூரத்துச் சொந்தத்திலேயே ஒரு பெண்ணைப் பிடித்து விட்டார். சபாபதிக்குத் தேவைப்படும் அம்சங்களை ஓரளவுக்கே பூர்த்தி செய்யக் கூடியவளாக இருந்தாலும், வசதியான, நல்ல குடும்பத்தைச் சேர்ந்தவளாக இருந்ததனால் அந்தப் பெண்ணையே முடித்து விடலாம் என்ற முழு நம்பிக்கையோடு இருந்தார் பரமசிவம்.

சபாபதியிடம் தம் கருத்தைச் சொன்னார். அரை மனத்தோடு தலையாட்டி வைத்த சபாபதி இரண்டு நாட்கள் கழித்து வந்து, ''அந்தப் பெண் பிடிக்கவில்லை—



# அவசரக் கால அடிமைகள்

வேறு இடம் பார்க்கலாம்'' என்றதும் ஒரே வடியாய் ஆடிப் போய்விட்டார்.

அதற்குப் பின் உறவுக்காரர்கள் ஒவ்வொரு வராக உபதேசம் செய்தும் சபாபதிக்கு உரைக்கவில்லை. ''சரி, காரியத்தில் இறங்கி விட்டோம். பாதியில் அதை நிறுத்துவதை விடப் பையனின் விருப்பப்படிதான் கொஞ் சம் விட்டுக் கொடுத்துப் பார்க்கலாமே'' என்று தீர்மானித்துக் கொண்ட பரமசிவம், சபாபதி கொடுத்த விலாசத்துக்குப் பெண் பார்க்கப் போவதற்கான ஏற்பாடுகளைச் செய்யத் தொடங்கினர். பெண்ணின் வீடு உள்ளூரிலேயே சற்றுத் தள்ளி டவுனுக்கு ஒதுக்குப்புறமாக இருந்தது. சபாபதியின் நண்பன் ஒருவன் அந்த விலாசத்தைக் கொடுத்ததோடு நில்லாமல் பெண்ணின் அழகை ஏகத் தடபுடலாக வருணித்து விட்டதால் சபாபதி அப்போதே இனிய கனவுகளில் ஆழ்ந்து போய் விட்டான். பெண்ணின் வீட்டைப் பார்த்ததுமே பரம சிவத்துக்குப் 'போக்'கென்று போய்விட்டது. கிட்டத்தட்ட ஒரு குடிசை போல் இருந்த வாடகை வீட்டில் அவர்கள் குடும்பம் வாழ்ந்து கொண்டிருந்தது.

பெண்ணின் தந்தை உயிரோடு இல்லை. வயதான தாயாரோடும், வயதுக்கு வந்த சில தங்கைகளோடும், வயதுக்கு வராத ஒரு தம்பியோடும் அவள் வாழ்ந்து கொண்டிருந் தாள். டவுனில் ஏதோ ஒரு ஜவுளிக் கடையில் வேலை பார்த்துக் கொண்டிருக்கிருள்! அவளும் அவள் தங்கைகளும் ஆங்காங்கே கிடைக்கும் வேலைகளுக்குப் போய்க் கொண்டிருப்பதால் வரும் சம்பாத்தியத்தில்தான் அந்த வீட்டின் காலட்சேபமே நடந்து கொண்டிருப்பது பார்த்தவுட்னேயே பளிச்சென்று தெரிந்தது. ஆனல் பெண் வெகு லட்சணமாக இருந் தாள். உலகத்தின் அழகை யெல்லாம் ஒட்டு மொத்தமாக அவளிடமே வைத்து விட் டானே இறைவன் என்று ஆச்சரியப் பட்டுப்போகும் வண்ணம், திருஷ்டிப் பட்டு விடுமளவுக்குப் பேரழகியாய் இருந்தாள். சபாபதி எதிர்பார்த்தது போல் கண்டிஞல் ரத்தம் தெறித்து விடுமளவுக்குச் சிவப்பு... அவளைப் பார்த்ததுமே சபாபதி கிறங்கிப் போய்விட்டான். பெரியப்பாவைப் பேச விடாமல் அவனே எல்லா விஷயங்களையும் கேட்டுத் தெரிந்து கொண்டான். ''சரசா'' என்ற அந்தப் பெண்ணின் பெயரைப் பல தடவை மனதுக்குள் காதோடு சொல்லிப் பார்த்துக் கொண்டான். அவனுடைய உற் சாகத்தைப் பார்த்ததும் எங்கே இந்தக் கல்யாணத்துக்குச் சம்மதம் சொல்லிவிடு வானே என்று பயந்துபோன பரமசிவம், ''வீட்டுக்குப் போய்ப் பேசிவிட்டுச் சொல்லி அனுப்புகிறேம்'' என்ற பதிலைப் பெண்ணின் தாயாரிடம் சொல்ல வாய் எடுக்கு முன்பே ''நல்ல நாள் பார்த்து நிச்சயதார்த்தத்துக்கு ஏற்பாடு பண்ணிட்டுச் சொல்லி அனுப்ப றேம் – என்ன பெரியப்பா?'' என்று சபாபதி பிரச்னைக்கு முற்றுப்புள்ளி வைத்தான்.




பரமசிவத்தின் முகம் காற்றுப் போன பலூனைக் கருங்கிப் போனதைக் கூடக் கவனிக்காமல், சபாபதி ''எல்லாச் செலவுகளுக்கும் நானாயிற்று'' என் பது போல் ஜம்பம் அடித்துக் கொண்டும், அவ்வப்போது மணப் பெண்ணைக் கண்களால் மேய்ந்து கொண்டு மிருந்தான். அதற்குப் பின்... ஆர்வம் குன்றிப்போய்.. வேடிக்கை பார்க்கும் மூன்றும் மனிதனைப் போல...எந்திரமாக அமர்ந்திருந்தார் பரமசிவம்! சபாபதிக்கு ஏகக்குஷியாக இருந்தது. காத்திருந்து கடைசியில் தன் கருத் துப் படியே கண்ணுக் குக் குளிர்ச்சியான பெண்ணைப் பிடித்து விட்ட தன் சாமர்த்தி யத்துக்கு ஸ்பெஷல் சபாஷ் போட்டுக் கொண்டான். நண் பர்கள் மத்தியில் அழ குத்தேவதையான தன்

மனைவியோடு "கர்வ நடை" போடுவதற்கான பயிற்சியை மனத்துக்குள்ளாகவே மறு பரிசீலனை செய்து பார்த்துக்கொண்டான். அவளுக்காக முன்பே ஒரு புடவைப் பரிசே வாங்கி விட்டான்!

"சரசு... டவுன்லேயிருந்து யாரோ வந்து உன்னைப் பார்த்துட்டுப் போனாங்களாமே" என்று யாரோ ஒரு பெண் கேலிசெய்வது காதில் விழவும் சபாபதியின் பார்வை பத்திரிகையிலிருந்து எதிர்ச் சீட்டுக்குத் தாவியது. அடுத்த கணம் அவன் ஆகாயத்தில் பறப்பதாக உணர்ந்தான். அவனுக்கு நேர் எதிரே அவள்... சரசு.... இவனுக்கு முதுகைக் காட்டியபடி உட்கார்ந்திருந்தாள்.... அவளைக் கேள்வி கேட்ட பெண்ணுக்கு என்ன பதில் சொல்லப் போகிறாள் என்பதைத் தெரிந்து கொள்ளும் ஆர்வத்தில் சபாபதி மீண்டும் தன் தலையைப் பத்திரிகையில் புதைத்துக் கொண்டான்! சரசுவின் பதில் ஆகாயத்தில் பறந்து கொண்டிருந்தவனைக் கீழே பாதாளத்துக்கு உருட்டித் தள்ளியது.

"ஆமா....வந்தாங்க...." — ஆர்வமில்லாமல், இயல்பான நாணமில்லாமல், யாரோ சென்ஸஸ் கணக்கெடுக்க வந்தவர்களைப் பற்றிச் சொல்வது போல் லேசான வெறுப்பு இழையோடும் விரக்தியான பதில் வந்தது சரசுவிடமிருந்து.

"ஏண்டி சரசு... உனக்கு மாப்பிள்ளை பிடிக்கலியா?"

"நம்ம இஷ்டத்தைப் பற்றி யாருடி கவலைப்படறாங்க? குடும்பக் கஷ்டத்தைப் பத்தித் தானே கணக்குப் போடறாங்க! பெண்ணைக் கட்டிக் குடுத்தாப் போதுங்கற கையாலாகாத்தனம் இருக்கிறவரைக்கும் அவங்க கைநீட்டற ஆம்பிளைக்குக் கழுத்தை நீட்டித் தானே ஆகணும்."

"ஏண்டி அப்படிச் சொல்றே? நீ கல்யாணம் பண்ணிக்கிட்டா இன்னும் சந்தோஷமா... வசதியா இருக்கப் போறே! இப்படி மாடா உழைச்சு ஓடாத் தேய வேண்டியதில்லையே...."

"அதென்னமோ வாஸ்தவம்தான். ஆறு கண்ணுக்கு லட்சணமான கணவனோட கம்பீரமா வாழ்ந்தோம்கிற ஆத்மத் திருப்தி இருக்குமா? ஏதோ கஷ்டம் தீர்ந்ததுங்கற நினைப்போடு கடனுக்கு வாழ்ந்துக்கிட்டு... ம்.... இந்தக் காலத்துலே பொண்ணு அழகா இருக்கணும்னு ஏதோ கடைப் பொருளை செலக்ட் பண்ற மாதிரி தன் மனைவியை 'செலக்ட்' பண்ற ஆண்கள்தான் இருக்காங்க. தன் மனைவி மட்டும் அழகுத் தேவதையா இருக்கணும்னு தேடி அலைஞ்சு, பெண் வீட்டாருடைய பலவீனத்தைப் பயன்படுத்தித் தனக்குக் கொஞ்சம் கூட பொருத்தமில்லாத பெண்களை எத்தனை பேர் விலை கொடுத்து வாங்கி யிருக்காங்க தெரியுமா? அவங்க எல்லாம் நிச்சயமா ஒரு உண்மையான மனைவியையோ, அல மனைசியோ அடைஞ்சிருக்க முடியாது. அவளுடைய அழகான உடம்பை மட்டும்..." சரசு சட்டென்று நிறுத்திவிட்டு வெளியே கடை வீதியின்பரபரப்பில் பார்வையைச்செலுத்தித்

தன மனத்தின் பாரத்தைப் பஞ்சாக்கிக் கொண்டாள்.

''அப்போ, உன்னைப் பார்க்க வந்த மாப்பிள்ளை உனக்குப் பொருத்தமில்லாதவன்னு நினைக்கிறயா?''

சரசு அவளுடைய தோழியின் கேள்விக்கு நேரடியாகப் பதில் சொல்லாமல் லேசாகச் சிரித்தாள். ''தனக்கு வரப்போற கணவன் அழகானவனு, கம்பீரமானவனு தன்னுடைய பர்சனாலிடிக்கு ஏத்தவனு இருக்கணும்னு பெண்களும்தான் எதிர்பார்ப்பாங்கங்கறதை இந்த ஆண்கள் ஏனோ புரிஞ்சுக்கிறதே இல்லே... அவங்க இஷ்டப்படிதான் எல்லாம் நடக்குது.. பெண்ணுரிமை எல்லாம் வெறும் பேச்சில்தாண்டி.''

''உனக்குக் கல்யாணத்தில் இஷ்டம் இல்லேன்னு சொல்லிவிட வேண்டியது தானே!''

''ஐயையோ! நான் உங்கிட்டே பேசினதைத் தயவு செய்து எங்கம்மா கிட்டே சொல்லிடாதே தாயே! அவ என்னுடான்னு கஷ்டம் தீர்ந்து போச்சுன்னு கடவுளுக்குக் கற்பூரம் கொளுத்திக்கிட்டு இருக்கா! இந்த நேரத்திலே எனக்கு இஷ்டமில்லேன்னு சொன்னு அவ இடிஞ்சு போயிடுவா. அம்மாக்களுக்கெல்லாம் இந்த அவஸ்தை புரியாதுடி! அழகுன்னு பேயா அலையறுங்களே அவங்களுக்குப் புரியணும்....''

''அப்ப உன் முடிவு?''

''மனசைக்கல்லாக்கிக்கிட்டு வந்தவனுக்குக் கழுத்தை நீட்ட வேண்டியதுதான். நீ சரியான மண்டுடி. அறிவு பூர்வமா யோசிக்காத ஆண்கள் இருக்கிற வரைக்கும் என்னதான் அறிவும், அழகும் இருந்தாலும் சில சந்தர்ப்பங்களிலே நாமெல்லாம் அடிமைகள் தாண்டி! அதுவும் வயசுக்கு வந்த பெண்களை வரிசையா வச்சுக்கிட்டு, வசதியில்லாமத் தவிக்கிற குடும்பத்திலே அழகான ரம்பையே பொறந்தாலும் அவளும் வர்றவனுக்குக் கழுத்தை நீட்ட வேண்டிய அவசரகால அடிமைதான்!''

அவர்கள் இருவரும் மிகவும் மெதுவாகத்தான் பேசிக் கொண்டார்கள். ஆனால் அவர்களின் வார்த்தைகள் இடியோசையாய்ச் சபாபதியின் செவிகளுக்குள் இறங்கியது. லேசாக அவனுடைய உடல் நடுங்கி,வியர்வையில் குளித்து. தொண்டையை வறட்சிப் பகுதியாக அறிவித்தது. அடுத்த ஸ்டாப்பிங்கில் தன்னை அவளுக்கு இனம் காட்டிக் கொள்ளாமல் அவசரம் அவசரமாக இறங்கி, அங்கிருந்து வீட்டுக்கு நடந்தான் சபாபதி... வறுமையின் வட்டத்துக்குள் சுருண்டு கிடக்கும் சரசுவே தன் எதிர்காலக் கணவன் எப்படி யெல்லாம் இருக்க வேண்டும் என்று எதிர்பார்க்கும்போது இன்னும் வசதியாக வாழும் பெண்கள் எல்லாம்....! வீட்டுக்கு வந்த சபாபதி கண்ணாடியில் தன் உருவத்தைப் பார்த்துக் கொண்டான். ஒடிசலான உருவமும்... உள்ளடங்கிய மூக்கும் வரிசையிலடங்காத பற்களும் அம்மைத் தழும்பேறிய முகமும் அர்த்தராத்திரி போன்ற நிறமும்..... ஓ! அவன் அதிகமாகத்தான் ஆசை வைத்து விட்டான்! சரசுவின் அழகுக்கு இவன் எந்த விதத்தில் பொருத்தமானவன்? எதையாவது சமாதானமாகச் சொல்லிக் கொண்டாலும் இளமைக் காலத்தின் நினைவுகளும், எதிர்பார்ப்புகளும், எல்லோருக்கும் இருந்து தொலைக்கின்றதே! அது பெண்களின் இதயங்களிலும் இருக்கும் என்பது எப்படி மறந்து போனது? சபாபதி வேதனையோடு உணர்ந்து, வேகம் குறைந்து, உட்கார்ந்து விட்டான்.

''கடைசியா நாம பார்த்துட்டு வந்த பொண்ணும் எனக்குப் புடிக்கலே! இனிமே நான் பொண்ணு பார்க்க வரதாவும் இல்லே! எனக்குப் பொருத்தமானவளா நீங்க எந்தப் பொண்ணைப் பார்த்துக் கட்டி வெச்சாலும் எனக்குச் சம்மதம்தான். அழகு முக்கியமில்லே — நல்ல குணம் இருந்தாப் போதும்— நீங்க முடிவு செய்யற பொண்ணுக்கு முதல் பரிசா இந்தப் புடவையைக் கொடுத்துடுங்க'' மூச்சு விடாமல் பேசிவிட்டுப் பார்சலை நீட்டும் சபாபதியை ஆச்சரியத்தோடு வாயைப் பிளந்தபடி அளவெடுத்தார் பரமசிவம். அதை லட்சியம் செய்யாமல் வீட்டுக்குள்ளே போய்க் கொண்டிருந்தான் சபாபதி. பரமசிவம், ''வெளியே மழை பெய்கிறதா'' என்று பார்த்துவிட்டு, ''இது நிஜம்தான்'' என்பதை உறுதி செய்துகொள்வதற்காகத் தம்மைத் தாமே கிள்ளிப் பார்த்துக்கொண்டார். அவருக்கு வலித்தது... ஆனால் ஆனந்தமாக!



## வேப்பிலைக்கட்டி ராமாயணம்!

தூப்புல் ஸ்ரீ லக்ஷ்மி நரஸிம்ஹஸ்வாமி உபன்யாசத்தில் கூறியது:

''ராமாயாணத்தில் வேப்பிலைக்கட்டி ராமாயாணம்னு ஒரு ராமாயணம் உண்டு தெரியுமா?

வீடுகளில் வேப்பிலைக் கட்டின்னு ஒன்று தயார் செய்வா — தொட்டுக் கொள்ள.

வேப்பலைக் கட்டின்னு பேரே ஒழிய வேப்பிலையால் தயாரிக்கப் பட்டதில்லை அது — முழுக்க முழுக்க நார்த்தை இலையை இடிச்சுச் செய்வார்கள்.

அதுபோல சிலர் செய்யும் ராமாயண பிரவசனத்தில் ராமாயண சம்பந்தமாய் ஏதுமே இருக்காது.

எப்பவோ ராமர், சீதை, லக்ஷ்மணர், ராவணன் என்று பெயர் வரும் அவ்வளவுதான்.

இதற்குத்தான் வேப்பிலைக் கட்டி ராமாயணம் என்பார்கள்.''

—அபரஞ்சி

"எதை எடுத்தாலும் எட்டு ரூபாய்... வாங்க சார் வாங்க... கடையிலே வாங்கினா பதினாறு. இங்கே பாதிக்குப் பாதி..."

பேருந்துக்கு விரைவாகச் சென்றுகொண்டிருந்த வையாபுரி சட்டென்று நின்றார்.

ஆண்களும் பெண்களுமாகச் சிறு கூட்டம். அவர்களுக்கு மத்தியில் பளபளக்கும் எவர்சில்வர் பாத்திரங்களின் குவியல்.

ஒவ்வொன்றாகத் தூக்கி நியான் விளக்கு வெளிச்சத்தில் பளிச்சிடக் காட்டிக் கூவிக் கொண்டிருந்தான் நடைபாதை வியாபாரி.

அருகில் சென்றார் வையாபுரி. சின்னதாக அழகாக, கைக்கு அடக்கமாக இருந்த ஒரு வட்டாவை (டிபன் கொண்டு செல்லும் பாத்திரம்) எடுத்துப் பார்த்தார்.

அது போன்ற ஒன்று வாங்கிக் கொடுக்கும்படி நீண்ட நாட்களாகத் தொல்லைப்படுத்திக் கொண்டிருக்கும் மகளின் நினைவு வந்தது அவருக்கு. இப்போது அதே வட்டா, மிகவும் மலிவான விலைக்குக் கிடைப்பதைப் பார்த்ததும் ஒன்று வாங்கிக்கொடுத்து விட்டால்தான் என்ன என்று தோன்றியது.

"யோசனை பண்ணாதீங்க சார். எடுங்க... எட்டே ரூபாய்தான். லாட்டு விற்பனை. கடையிலே வாங்கினால் பதினாறு. லேசாக ஒடுக்கல் விழுந்திருக்கிறதாலே பாதிக்குப் பாதி..."

# மலிவாக ஒரு வட்டா!

மாரி-அறவாழி



அவன் சொன்னது போல் பாத்திரங்களில் சில இடங்களில் லேசான ஒடுக்கல் விழுந்திருந்தது.

'விலையுயர்ந்த எவர்சில்வர் சாமான்களை இவ்வளவு மலிவு விலையில் விற்கிறானே என்ன காரணம்?' என்று அவர் மனத்தில் தோன்றிய சந்தேகம் அவன் கூறிய உண்மையால் அடிபட்டுப்போனது.

இருந்தவற்றுள் நல்லதாகப் பார்த்து ஒன்றை எடுத்துக் கொண்ட வையாபுரி, பர்ஸைத் திறந்தார். பதினைந்தே ரூபாய் தான் இருந்தது. மாதக் கடைசி வரை அது தான் அவருடைய கைச் செலவுக்கு.

கொஞ்ச நேரம் யோசித்துக் குழம்பிப் பிறகு என்ன ஆனாலும் ஆகட்டும் என்று துணிந்தார்.

வட்டாவை 'பேக்'செய்து தரும்படி வியாபாரியிடம் சொன்னார்.

"ரொம்ப நாட்களாகத் துளைத்துக் கொண்டிருக்கிறாயே என்று வாங்கி வந்தேன்... இது போதுமா பார்...."

என்று சொல்லிக் கொண்டே வீட்டில் நுழைந்த வையாபுரி வட்டாவை மகளிடம் கொடுத்தார் பெருமிதத்துடன்.

மகிழ்ச்சியால் துள்ளிக் குதித்த மகள் சமையல்கட்டுக்கு ஓடினாள்.

'ஆ'வென்று வாயைப் பிளந்த மனைவி, "மலிவானால் ஒரு சாப்பிடும் தட்டும், பால் காய்ச்சும் பாத்திரமும் வாங்கி வந்திருக்கக் கூடாது?" என்று குறைப்பட்டுக் கொண்டாள்.

அடுத்த நாள் பள்ளிக்குப் புறப்பட்ட மகள் கையில் புதிதாக வாங்கிய அழகிய வட்டா பளபளத்தது.

மாலையில் அலுவலகம் முடிந்து வெளியே வந்த வையாபுரிக்கு டாக்டர் சுந்தரத்தின் ஞாபகம் வந்தது.

அவருடைய பழைய 'மெடிகல் பில்' ஒன்று டாக்டரிடம் நீண்ட நாட்களாகத்

தூங்கிக் கொண்டிருக்கிறது. அதை வாங்கி வந்து சாங்ஷனுக்கு அனுப்பி வைத்தால் மாதக் கடைசியில் செலவுக்குப் பிரயோசன மாக இருக்கும்.

மறுநிமிடம் அவர் கால்கள் சுந்தரத்தின் டிஸ்பென்ஸரிக்கு நடந்தன.

டாக்டரிடம் கூட்டம் அதிகம் இல்லை. இரண்டொருவரே உட்கார்ந் திருந்தனர். வையாபுரியும் கடைசியாகப் போய் அமர்ந் தார்.

ஒவ்வொருவராக உள்ளே போய் வந் தனர். அடுத்தது வையாபுரியின் முறை.

அப்போது ஒரு பெண் கண்ணீரும் கம்பலையு மாக ஒரு பையனைத் தூக்கிக் கொண்டு ஓடி வந்தாள்.

வையாபுரியை ஒதுக்கித் தள்ளி விட்டு டாக்டர் முன் கிடத்தினாள்.

பையன் அவளுடைய மகன். எட்டு ஒன் பது வயதிருக்கும். வாடிய மாலை போல் துவண்டிருந்தான். உடலில் அசைவு இல்லை. பேச்சு மூச்சு இல்லை.



அவளிடம் அவசரம் அவசரமாக விசா ரித்துவிட்டு, பையனைப் பரிசோதித்தார் டாக் டர்.

முன்பே ஏன் கொண்டு வரவில்லை என்று கடிந்து கொண்ட பின், உதவியாளரைக் கூப்பிட்டுப் பையனுக்கு எனிமா கொடுத்து வயிற்றைச் சுத்தம் செய்யும்படி கட்டளை யிட்டார்.

பையனைத் தூக்கிக் கொண்டு பின் பகு திக்குப் போனார் உதவியாளர். தாயும் கூடவே ஓடினாள்.

டாக்டர் முன் போய் உட்கார்ந்த வையா புரி மெடிகல் பில் பற்றிப் பேச்சு எடுத்த போதுதான் ''அடடே! வேலைத் தொல்லையில் அதைப் போட்டு வைக்க மறந்து விட்டேன். நாளைக்கு வருகிறீர்களா?'' என்று கையை உதறினார்.

''அதனால் என்ன டாக்டர்... அவசரம் ஒன்றுமில்லை. மெதுவாகப் போட்டு வையுங்க. நாளைக்கு வருகிறேன்...''

என்று சொல்லிவிட்டு எழுந்த வையாபுரி பேச்சோடு பேச்சாக விசாரித்தார்:

''என்ன கேஸ் அது டாக்டர்?''

''பையனைப் பற்றித்தானே கேட்கிறீர்கள்? பாய்ஸன் கேஸ்!''

''அடப் பாவமே! சின்னப் பையனாக இருக் கிறானே, எதற்காகச் சாப்பிட்டிருப்பான்?''

டாக்டர் சிரித்தார்.

''குப்பத்திலும் சேரியிலும் இருக்கிற குழந்தைகளை யார் சார் கவனிக்கிறாங்க? பெற்றுவிட்டதோடு அப்பா அம்மா கடமை முடிந்து விடுகிறது. அதன் பிறகு அது எப் படியோ அலைந்து திரிந்து குட்டிச்சுவராக வேண்டியதுதான்....''

அவர்கள் பேசிக் கொண்டிருக்கும்போது உதவியாள், பரபரப்புடன் ஓடிவந்து டாக் டரை அழைத்தார்.

வையாபுரிக்கு விடை கொடுத்து அனுப்பி விட்டு எழுந்து சென்றார் டாக்டர்.



“புது வட்டா மிகவும் சிறியதாக இருந் ததே... கொண்டுபோன சாப்பாடு வயிற் றுக்குப் போதுமானதாக இருந்ததா?''

என்று மகளிடம் விசாரித்தார் வையாபுரி— வீடு திரும்பியவர்.

''மத்தியானம் நான் சாப்பிடவே இல் லேப்பா. ஆமாம்பா சோறெல்லாம் ஒரே பச்சை நிறமாக மாறிவிட்டது....''

''அடக் கடவுளே! எப்படி ஆயிற்று?''

இந்தச் சமயத்தில் மனைவி ஓடிவந்து குறுக் கிட்டாள். ''மகா மட்டமான இரும்புத் தகடு! அதற்கு வெள்ளை முலாம் பூசி, எவர்சில்வர் என்று சொல்லி உங்கள் தலையில் கட்டியிருக்கிறான் அந்த நாசமாய்ப் போன வியாபாரி....''

இவ்வாறு கூறிய மனைவி அந்த வட்டாவை எடுத்து வந்து காட்டினுள்.

வெளியே பளபளப்பாக இருந்தது. ஆனல் உள்ளே களிம்பு ஏறிக் கன்னங் கரேலென்று இருந்தது.

விரலால் அழுத்தித் தேய்த்துப் பார்த்தார் அவர். சந்தேகமே இல்லே. இரும்பினுலான பாத்திரம்தான் அது!

உள்ளம் கொதித்தது அவருக்கு.

ச்சே! எவ்வளவு கேவலமான வியாபாரிகள்! மக்களை எப்படி யெல்லாம் ஏமாற்றுகிறுர்கள்!

அடுத்த நாள் அந்த நடைபாதை வியா பாரியைத் தேடிப் பிடித்து நாலு வார்த்தை நறுக்கென்று கேட்பதோடு பணத்தையும் திருப்பி வாங்கிக் கொண்டு வந்து விடவேண் டும் என்று நினைத்துக் கொண்டார்.

மறுபடியும் மகளிடம் கேட்டார்.

''சரி. அந்தச் சாப்பாட்டை என்னம்மா செய்தாய்?''

''வேறு என்ன செய்வது? · ப்யூனிடம் கொடுத்து வெளியே கொட்டிவிட்டு வடை வாங்கிச் சாப்பிட்டேன்.''

''நல்ல வேலே செய்தாய்! தப்பித் தவறிச் சாப்பிட்டிருந்தால் பெரிய ஆபத்தாகப் போயிருக்கும்.''

வக்கீல்: மனம் உடைந்து விடாதீர்கள். சுப்ரீம் கோர்ட்டில் நமக்குத்தான் வெற்றி!

கட்சிக்காரர்: சுப்ரீம் கோர்ட்டா? ஹைகோர்ட் வரை போனதிலேயே என்னுடைய சொத்து பூராவும் காலி. இப்ப கையிலே பைசா கிடையாது!

வக்கீல் : எல்லாம் போய் விட்டதா? இனிமே வெளியே வந்துதான் என்ன பிரயோசனம்? ''ஜம்'' என்று உள்ளேயே இருந்துவிட்டு வாரும்!

—எஸ்.பாஷு



மறுநாள் அலுவலகம்முடிந்தவுடன் நடை பாதை வியாபாரியைத் தேடிக் கடைத் தெரு முழுவதும் அலேந்தார் வையாபுரி.

ஆனல் அவன் எப்படிக் கிடைப்பான்? ஊரை ஏமாற்றுபவன் ஓர் இடத்தில் இருப்பதில்லேயே.

வீடு திரும்பும் வழியில் டாக்டர் சுந்தரத் தின் டிஸ்பென்ஸரிக்குப் போனுர்.

''வாங்க...வாங்க உங்க பில் ரெடி''என்று எடுத்து நீட்டினுர் டாக்டர்.

''ரொம்ப தேங்க்ஸ் டாக்டர்'' என்று சொல்லி வாங்கிக் கொண்ட வையாபுரி, மறவாமல் கேட்டார்: ''நேற்றைய பாய்ஸன் கேஸ் என்ன ஆயிற்று?''

''ஓ! அதுவா?... பையன் பிழைத்துக் கொண்டான். கொஞ்சம் தாமதித்துக் கொண்டு வந்திருந்தாலும் என்னுலும் ஒன் றும் செய்திருக்க முடியாது சார்...''

''பையனுக்கு விஷம் எப்படிக் கிடைத்த தாம்?''

''விஷமெல்லாம் சாப்பிடவில்லே ஸார். அவன் வழக்கம்போல் ஊரைச் சுற்றிக் கொண்டு வந்திருக்கிறுன். பெண்கள் கல் லூரி கேண்டீன் புறக்கடையில் கெட்டுப் போன சோற்றை யாரோ . இலேயோடு வைத்துவிட்டுப் போயிருக்கிறுர்கள். பைய னுக்கு நல்ல பசி. எடுத்துச் சாப்பிட்டு விட்டான். கெட்டுப்போன சோறு உள்ளே போய் விஷமாக மாறி வேலே செய்துவிட்டது அவ்வளவுதான்...''

ஊசியால் சுருக்கென்று குத்தியது போல் இருந்தது வையாபுரிக்கு.

தான் கொண்டுபோன சோறு கெட்டு விட்டதாக மகள் சொல்லியிருந்தது சட் டென்று ஞாபகம் வந்தது.

அந்தச் சோற்றைத்தான் இந்தப் பையன் பார்த்திருப்பானே? சாப்பிட்டிருப்பானே?

தம் சந்தேகத்தை ரகசியமாக டாக்ட ரிடம் வெளியிட்டார்.

''அப்படியா?'' என்று கேட்டுக்கொண்டே அவர் சிறிது நேரம் யோசித்துவிட்டு உறுதிப் படுத்தினுர்.

''சந்தேகமே வேண்டாம் சார். பையன் சாப்பிட்டதுஅதே சோற்றைத்தான். எனிமா கொடுத்து வயிற்றைக் கழுவியபோது கூட பச்சை நிறமான சோற்றுப் பருக்கைகள்தான் வெளி வந்தன! ஆமாம், தெரியாமல்தான் கேட்கிறேன். கெட்டுப்போன சாப்பாட்டை எப்படி எடுத்துச் சென்ருள் உங்கள் மகள்?''

''கொண்டுபோகும்போது நன்ருகத் தான் இருந்தது டாக்டர். பிறகுதான் கெட்டுப் போயிருக்கிறது!'' என்று துவங்கி, மலிவு விலேயில் எவர்சில்வர் வட்டா வாங்கி ஏமாந்த கதையை விவரித்தார் அவர்.

அப்போது அறைக்கு வெளியே யாரோ வந்து நிற்க,

''என்ன வாசுதேவன்! பையன் எப்படி இருக்கிறுன்? உடம்புக்கு ஒன்றுமில்லேயே?'' என்று விசாரித்தார் டாக்டர்.

''நல்லா இருக்கிறுனுங்க. சொல்லிவிட்டுப் போகலாம்னுதான் வந்தேன்...,''

என்று பதிலளித்த வண்ணம் உள்ளே வந்து டாக்டர் முன் நின்றான் அந்த நடுத்தர வயதுடைய ஆள்.

அவனை ஏறிட்டுப் பார்த்த வையாபுரி அதிர்ந்து போனார். பரபரப்புடன் கேட்டார்.

''டாக்டர்!....இவர்....''

''பாய்ஸன் கேஸ் பையனுடைய அப்பா!''

''அப்படிச் சொல்லாதீர்கள் டாக்டர். மனச்சாட்சி என்பதே இல்லாத மோசடிக் காரன் என்று சொல்லுங்கள்...''

வையாபுரியின் ஆத்திரம் டாக்டரைத் திடுக்கிட வைத்தது.

''என்ன சொல்கிறீர்கள் வையாபுரி?''

''எவர்சில்வர் என்று சொல்லி, முலாம் பூசிய இரும்பு வட்டாவை ஒருவன் என் தலையில் கட்டினான் என்று சொன்னேன் பாருங்கள். அந்த அயோக்கியன் இவன் தான்.....''

''உண்மையாகவா?''

''நீங்களே கேட்டுப்பாருங்களேன் இவனை?''

அவனைக் கோபத்துடன் பார்த்துக் கேட்டார் டாக்டர். ''என்ன வாசுதேவன்! இவர் சொல்வது உண்மைதானா?''

அவன் சட்டென்று தலையைக் குனிந்தான். தழுதழுத்த குரலில் சொன்னான்.

''உண்மைதான் டாக்டரய்யா...''

''ச்சே! என்ன மனிதனப்பா நீ! இப்படியா ஏமாற்றிப் பிழைப்பது மற்றவர்களை''

ஒன்றும் பேசாமல் நெடு மரமாய் நின்றான் அவன். தொடர்ந்து டாக்டர் பேசினார்.

''யானை தன் தலையில் தானே மண்ணை அள்ளிப் போட்டுக் கொள்ளுமாம். அது போல் நீ மோசடி செய்தது இவரிடம்தான் என்றாலும் அதன் விளைவு இவரைப் பாதிக்க வில்லை. உன் மகனுடைய உயிருக்குத்தான் ஆபத்து விளைவித்தது. தெரிந்து கொள்...''

அவன் அலறினான்.

''என்ன சொல்றீங்க டாக்டரய்யா?''

நடந்தவற்றை யெல்லாம் விவரமாக எடுத்துக் கூறினார் டாக்டர்.

''ஐயோ அப்படியா?'' என்று கதறிய அவன் தடாலென வையாபுரியின் காலில் விழுந்தான்.

''என்னை மன்னிச்சுக்கொள்ளுங்க ஸார்! நான் மோசடிக்காரன்தான் ஆனால் நீங்க நினைப்பது போல் நான் விற்றது அனைத்துமே முலாம் பூசிய பாத்திரங்கள் அல்ல. எவர்சில்வர் பாத்திரங்களோடு முலாம் பூசியதையும் கலந்திருந்தேன். இந்த வியாபாரத்தில் இது சகஜம். ஆனால் உங்க அதிர்ஷ்டம் சுத்தமான எவர்சில்வர் பாத்திரங்களை யெல்லாம் தள்ளிவிட்டு முலாம் பூசிய வட்டாவை எடுத்துக் கொண்டு போயிருக்கிறீர்கள். அதுக்காக என்னை மன்னித்துவிடவேண்டும் நீங்கள். இந்த நிமிஷத்திலேருந்து இது போன்ற வியாபாரத்தில் ஈடுபடவே மாட்டேன். சத்தியம்! நம்புங்கள்.''

அழாக் குறையாகக் கெஞ்சினான் வாசுதேவன்.

''எழுந்திருப்பா. செய்தது தவறு என்பதை உணர்ந்து இனிமேலாவது திருந்திக் கொண்டால் அதுவே போதும் எனக்கு...''

அவனை எழுப்புவித்தார் வையாபுரி.



# ஸ்ரீதேவி பாஸ்போர்ட்

## போட்டி முடிவு

சலன் குறித்து வைத்திருந்த சரியான விடைகள்:

உயரம்: 5 அடி 7 அங்குலம்.

கண்கள் நிறம்: கறுப்பு.

உடலில் மச்சம் இருப்பது: வலது குதி காலின் உள்பக்கம்.

பிறந்த தேதி: ஆகஸ்டு 13, 1963.

சென்ற நாடுகள்: ஸ்ரீலங்கா.

சரியான விடைகளை 52 வாசகர்கள் எழுதி ரூ. 500 பரிசைப் பகிர்ந்து கொள்கிறார்கள்.

1. கே. எஸ். வந்தனம், சென்னை-14. 2. டி. கல்யாணி, பெங்களூர். 3. டி.ரமணன், சென்னை-33. 4. டி. பிரமீளா, சேலம். 5. மிஸ். ஏ.—சாந்தா, ஆலப்புழை. 6. கே. ராஜ குமாரி, வத்தலகுண்டு. 7. எம். நாகவேணி, கோயமுத்தூர். 8. மிஸ் என். ராஜி, கும்ப கோணம். 9. எஸ். பி. மகேந்திரன், சேலம் 10. கே. ராஜேந்திரன், சென்னை-17. 11. பசுமதி கண்ணன், மதுரை. 12. எம். பிரியா. சென்னை-4. 13. கே. சுந்தர், சின்ன சேலம் 14. ஆர். நாராயணசுவாமி, கோவை. 15. பி. சுபா, கோவை. 16. எஸ். மாதங்கி, சென்னை-86. 17. டி. மாதேசுவரி, சேலம். 18. டி. ஷீலா, கடலூர்-1. 19. ஆர். எஸ். கணேசன், கோவை. 20. ஜே. எம். திரு வள்ளுவினன், திருச்செங்கோடு. 21. எஸ். ராஜன், திருச்சி-2. 22. என். லட்சுமி, சென்னை-17. 23. ஏ. டி. நரசிம்மன், சென்னை-5. 24. ஆர். மீனாட்சி, கோய முத்தூர். 25. வி. பஞ்சாபகேசன், திருச்சி 26. பி. எஸ். சோபனா, வேலூர். 27. எம். ஏ. காதர், விருத்தாசலம். 28. கே. பி. மனோ ரமா, வேலூர். 29. ஏ. ராஜேந்திரன், பெங் களூர். 30. ஆர். உஷா, சென்னை-88. 31. கலோசனா ராஜகோபால், ஹிஸ்ஸார். 32. மாசிலாமணி முதலியார், சென்னை-14. 33. சௌந்தரா வேங்கடாசலம், சென்னை-18 34. முருகேசன், சென்னை-1. 35. மிஸ் உஷா சென்னை-82. 36. வி. பாலாஜி, பொள் ளாச்சி. 37. ஆர். பூமா, பொள்ளாச்சி 38. ராஜிவேங்கடராமன், பொள்ளாச்சி, 39. கோதை சுந்தரம், போரூர். 40. ஆர். உமா, ராஜபாளையம். 41. அருட்செல்வன், பள்ளத்தூர். 42. எஸ். ராமகிருஷ்ணன், ராஜபாளையம். 43.பிரகாஷ் பாபு, பாண்டிச் சேரி. 44. வி. ராஜி, பழனி. 45. காதர் கரை, கோவை-4. 46. நிமல்ராஜ், சத்ய விஜயநகரம். 47. வி. கே. கண்ணன், சென்னை-34. 48. ஏ. சுப்புலட்சுமி, சென்னை-30 49. வி. இந்திரா, வண்ணார் பேட்டை. 50. பத்மாவதி ரத்தினம், மதுரை-9. 51. பி. கேசவராவ், சென்னை-82 52. ஆர். நித்யகல்யாணி, கோலார்.

# வஸந்த்! வஸந்த்!

**சுஜாதா**

## 21. "சோடியம்! இதோ வர்றேன்!"

**கா**லை டி. ஐ. ஜி ராஜேந்திரனைப் பார்க்கச் சென்றார்கள்.

''என்ன ஸார், நீங்க டி.ஐ.ஜி. ஆனதுக்கு பார்ட்டி ஏதும் இல்லையா?'' என்றான் வஸந்த்.

''இன்னும் ஒரு வருஷம் கழிச்சுக் கேளுங்க. என்ன வஸந்த்! உங்க கல்யாணம் எப்ப?''

''அதை ஏன் கேக்கறீங்க! நம்ம ஜாதகத்தில அந்தக் கட்டம் காலியாவே இருக்கு!''

''இப்ப காதல் பண்ணிண்டிருக்கான். அதிலேதான் விவகாரமே ஆரம்பிச்சது'' என்றான் கணேஷ்.

''என்ன இது சரித்திர ஆராய்ச்சில எல்லாம் இறங்கியிருக்கிங்க!''

''கிணத்துக்குள்ள இறங்கலை. அதுஒண்ணுதான் பாக்கி.''

''அந்தக் கிணத்தைப் பாதுகாக்கறதுக்கு மெஸேஜ் அனுப்பிச்சு வச்சிருக்கேன். விவரம் என்ன சொல்லுங்க. டெலிபோன்ல சொன்னது குழப்பமா இருந்தது.''

''ஸிம்பிள் மேட்டர் ஸார். தங்கக் காசுக்கு அலையறாங்க எல்லாரும்.... பழைய காலத்தில குன்றிமணி, கழஞ்சு, காசு, மாடன்னு அடிச்சுப் போட்டிருக்காரு ராஜ ராஜ சக்கரவர்த்தி. அதில மசடன்கிறது தங்கக் காசு. அதில 500 காசு கிணத்திலே போட்டுட்டதா சரித்திரக் குறிப்பு. கல்வெட்டு இருக்குது. அதுக்கு ஜனங்க ஆலாப் பறக்கறது.''

''சரித்திரக் குறிப்புன்னு ஆர்க்கியாலஜி டிபார்ட்மெண்ட்லே எக்ஸ்கவேட் பண்ணியிருப்பாங்களே!''

''இது ஏதோ இன்னும் வெளியே வராத ரகசியக் கல்வெட்டு மாதிரி தோணுது. அதனாலதான் உக்கல் கிராமத்தில போக்குவரத்து அதிகமா இருக்குது.''

''அப்ப அந்தக் கிணத்தை இறைச்சுப் பார்த்துறலாமா வாரீங்களா? என்ன கிராமம் சொன்னீங்க? உக்கலா?''

''சார், இறைச்சு அகப்பட்டா காசில ஒரே ஒரு காசு இந்தப்பக்கம் தள்ளினிங்கன்னு என் காதலுக்கு உபகாரமா இருக்கும்!''

''எனக்கென்னவோ காசு அகப்படும்னு தோணலை.'' என்றான் கணேஷ்.

''ஏன்? ஏற்கனவே எடுத்திருப்பாங்களா?''

''சொல்ல முடியாது. இருந்தும் அதை ஆர்க்கியாலஜி டிபார்ட்மெண்ட்ல விசாரிக்கப் பார்த்துறலாம். பேராசியர் அப்பாதுரை கல்வெட்டு ஆராய்ச்சி மூலம் அந்தக் கிணத்துல தங்கக் காசு நகைகள் எல்லாம் இருக்கிறதா முடிவு பண்ணி யிருக்கார்.. அப்படி அந்தச் செல்வம் அந்தக் கிணத்துக்குள்ள இருந்தா இதுவரைக்கும் வேற ஒருத்தரும் அதை எடுக்காம விட்டு வெச்சிருப்பாங்களான்னு முதல் சந்தேகம். டிப்பார்ட்மெண்டுக்கு அதைப் பத்தித் தெரியாமப் போயிருக்குமா? எவ்வளவு தீவிரமா எவ்வளவு வருஷமா எவ்வளவோ பேர் ஆராய்ச்சி பண்ணி இருப்பாங்க... இந்தக் கிணத்துல புதையல் இருக்கிற விஷயத்தைக் கண்டு பிடிக்காம இருந்திருப்பாங்களா? முதல்ல அதை விசாரிக்கணும். இருந்தும் இந்தக்கிணத்தைச் சுத்திச் சில மர்மமான விஷயங்கள் எல்லாம் நடக்குது. சரித்திர சம்பந்தமே இல்லாத வெத்துக் கோஷ்டி உலாத்துது. ராஜேந்திரன், நேத்தைக்கு இரண்டு ஆளுங்க வந்து எங்கிட்ட ரகளை நடத்துக்கிட்டு உனக்கு என்ன தெரியும் என்ன தெரியும்னு திருப்பித் திருப்பிக் கேட்டாங்க. நான் ஏதோ மழுப்பினேன். அவங்க ஒரு விதமான பதிலை எங்கிட்ட இருந்து எதிர்பார்க்கறாங்கன்னு தெரிஞ்சுது. என்ன பதில் அது?''

''அவுங்க ரெண்டு பேரையும் விட்டுட்டீங்களா?''

''ஓடிப் போயிட்டாங்க.''

''அடையாளம் சொல்ல முடியுமா?''

''ஒரு பேர் தெரியும். அடையாளம் தெரியும்.''

''பழைய கேடி யாராவதான்னு பார்த்துறலாம். இப்ப நீங்க கிணத்தில் என்னதான் இருக்குங்கறீங்க?''

''சுருக்கமாச் சொன்னா அதான் இப்பப் பிரச்னை. கிணத்துல தங்கமா, அல்லது வேற ஏதாவதா?''

''தங்கந்தான் பாஸ்!''

''அப்படின்னா பத்துக்குநாப்பது, முப்பது இதுக்கெல்லாம் என்ன அர்த்தம்?''

''காசுக்கு விலை பேசறாங்க!''

''பத்துக்கு முப்பது பத்துக்கு நாப்பதை விட நல்ல விலையா? இதென்ன தலைகீழ் விலை?''

''அதானே!'' என்றான் வஸந்த்.

''அப்புறம் பாருங்க.. உக்கல் பஸ் ஸ்டாண்டிலே ஒரு ஸ்ட்ரே கேஸ்! ஸாம்பிள் கொண்டு வந்திருக்கியான்னு கேட்டு ஒரு தஞ்சாவூர் வியாபாரியோட பொட்டியைப் புடுங்கிக்கிட்டு ஓடியிருக்காங்க. அங்கயும் அந்தப் பத்துக்கு நாப்பது வியாபாரம் பேசியிருக்காங்க!''

''அது என்னவோ இந்தக் கேஸுக்குச் சம்பந்தம் இல்லாத தற்செயலான விஷயம்னு தோணுது பாஸ்!''

''இருங்க வஸந்த். கணேஷ் நீங்க உங்க சந்தேகத்தை எல்லாம் சொல்லுங்க.''

''எல்லாமே நெபுலஸ்ஸா இருக்கு ராஜேந்திரன்... முதல்ல அருண் எண்டர்ப்ரைசஸ்னு ஒரு கம்பெனிக்கும் இந்தக் கோஷ்டிக்கும் சம்பந்தம் இருக்குன்னு தெரியுது. விஷயம் தீவிரமானதுன்னு தெரியுது. கொலை செய்யவும் அஞ்சாத ஆசாமிங்கன்னு தெரியுது. கூழமந்தல்ல தொல்பொருள் இலாக்கா சிப்பந்தி ஒருவனுக்கு ஏதோ தெரியக் கூடாத விஷயம் தெரிஞ்சு போய்

அவனைத் தீர்த்துக் கட்டிட்டாங்க. சதா சிவம்னு ஒரு ஆளுக்கு இதில ஏதோ தரகு வேலைன்னு தெரியுது. ஆனா அவனைச் சித்ர வதை செய்தாலும் ஏதும் சொல்ல மாட் டான்னு தோணுது.''

''ஒமர் கய்யாம்னு ஒரு ஹோட்டல்ல காபரே ஆடற பொண்ணு எங்கிட்ட வந்து அவங்ககூடச் சேராதேன்னு எச்சரிக்கை செஞ் சது. அதையும் சொல்லிருங்க! அதை வேணு கொஞ்சம் சித்ரவதை செஞ்சு பார்க்க லாம்....''

''இதனிடையே சரித்திரப் பேராசிரியரு டைய ஆராய்ச்சி... வஸந்த் அந்த சதா சிவத்தின் கையில பார்த்த ஒரு பொட்டலத் தில் இருந்து விழுந்திருந்த மரத் துண்டு அதிலே ஸோடியம் ஹைட்ராக்ஸைடு டைட் டேனியம்னு என்ன என்னவோ கெமி கல்ஸ்!''

''சரியான குழப்பங்க! இதை யெல் லாம் ஒட்டவைக்கிற சரடு வேணும் அவ்வளவுதானே?''

''அவ்வளவுதான்!''

''அப்புறம் பல்லாவரத்திலே ஒரு தனி வீடு''

''இருங்க இருங்க. தலை சுத் துது. கணேஷ் நீங்க என்ன பண்றீங்க எல்லாத்தையும் எனக்கு ஒரு ரிப்போர்ட் மாதிரி எழுதிக் கொடுத் திருங்க... ஸி. ஐ. டி. டிபார்ட்மெண்டிலே ஒவ் வொரு ஆங்கிளையும் துப்புரவா விசாரிக்கச் சொல்லிடறேன்.''

''எல்லாத்தையும் எழுதிட்டு வந்திருக் கோம் ராஜேந்திரன்.''

''செஞ்சிருப்பீங்களே! சரி என்னை நாலு நாள் கழிச்சு வந்து பாருங்க.... ஆமா! கோர்ட்டையும் பார்த்துக்கிட்டு இதையும் பார்த்துக்கிட்டு... எப்படி உங்களுக்கு டயம் இருக்கு!''

''இருபத்தி நாலு மணி நேரம் பத்தலே.... இடையிலே கொஞ்சம் அடிதடி வெடி... அப் புறம் நடு நடுவ தேங்காய் மூடி கேஸ் வேற எடுத்துக்கிட்டிருக்காரு!''

''அது என்ன?''

''டாக்டர் நரேந்திரன்னு ஒருத்தரோட வழக்கு... டார்ட்ஸ், ஐ.பி.ஸி டிரக் ஆக்ட் எல்லாம் வருது... எனக்குத் தண்டனை கொடுத்தே ஆகணும்னு மன்னாடறாரு!''

''கேள்விப்பட்டேன். ஒரு மால் பிராக்டிஸ் கேஸ்தானே? சான்ஸே இல்லே.''

''ட்ரை பண்றோம்... வரோம்.''

ராஜேந்திரனின் அலு வலகத்தை விட்டு வெளியே வரும் போது கணேஷ்

''வஸந்த்! லைப்ரரிக் குப் போய்...''என்று ஆரம்பித்தான்.

''தெரியுமே! விட மாட்டீங்களே? சோதி யம் பத்தித்தானே? உடனே கவனிக்கிறேன்'' என்றான்.



நூல் நிலையத்தில் அந்தப் பெண் கண்ணாடியை எடுத்துவிட்டால் அழகாக இருப்பாள் என்று நினைத்தான். அவளருகே சென்று மெல்லிய குரலில் ''குட் மார்னிங்...'' என்றான்.

''குட்மார்னிங்.''

''சோடியம்....''

''பார்டன்?'' என்று நிமிர்ந்தாள்.

''சோடியம் பற்றி எனக்குத் தெரிந்து கொள்ளணும்...''

''நேரே போங்க. எட்டாவது அலமாரி. கெமிஸ்ட்ரி.''

''தாங்க்ஸ்! உங்க பேரு ஸ்ரீலேகாதானே?''

''இல்லே.''

''பேரை மாத்திட்டிங்களா?''

''மிஸ்டர்! உங்களுக்கு சோடியம் வேணுமா இல்லே, என் பேர் வேணுமா?''

''ரெண்டுமே.''

''என் பேரு மிஸஸ் ராகவன். மிஸ்டர் ராகவன் அதோ கண்ணாடி அறைக்குள்ளே உட்கார்ந்திருக்கார்!''

வஸந்த் புன்னகைத்து, ''அப்படியா? அவரைத் தொந்தரவு பண்ண வேண்டாம். மேலும் என்கிட்டப் பயந்துண்டு கண்ணாடிக் குள்ள—இருக்கற ஃபெர்னாண்டஸை பேர் மாத்தவும் வேண்டாம். ஸீயூ!'' என்று விலகினான்.

அவன் பார்வை முதுகில் சுட கெமிஸ்ட்ரி அலமாரியை அணுகினான். சின்னச் சின்ன மேஜைகளின் முன் புத்தகங்கள் இரைந்திருக்க இங்கே ஒரு சோடா பாட்டில் கண்ணாடியும், அங்கே ஒரு ஜோல்னாப் பையுமாகத் தீவிரவாதிகள் படித்துக் கொண்டிருந்தார்கள். சரித்திரப் பகுதியில் அலுமினிய ஏணியில் மூன்றாம் படியில் இனியா நின்று கொண்டு சதாசிவப் பண்டாரத்தாரின் லேட்டர் சோழர்களை எவ்வ முயன்று கொண்டிருந்தாள்.

''இனியா! சர்ப்ரைஸ்!... உன்னே இங்க பாப்பேனு எதிர்பார்க்கலே. பார்த்த உடனே வயத்துக்குள்ளே சின்னதா வண்ணாத்திப் பூச்சி பறக்கறது... இனியா...''

''ஷ்!'' என்றார் பேராசிரியர் அப்பாதுரை.

''ஓ! ஸார் நீங்களும் வந்திருக்கீங்களா?''

நூல் நிலையமே ''ஷ்ஷ்ஷ்....'' என்றது.

இனியா வஸந்தை ஒரு முறை பார்த்து விட்டு மீண்டும்சதாசிவப் பண்டாரத்தாருக்குத் திரும்பினாள்.

வஸந்த் சற்று நேரம் நின்று பார்த்தான். பேராசிரியர் அவர் அளவுக்கு இருந்த புத்த

# அமர காவியம்



பெயரைக் கேட்டதும், இதுதான் கதை என்று சொல்லும் வகையில் காதல், பாசம், தியாகம் என்ற சமாச்சாரங்கள் கலந்தபடம்.

ரவுடி சின்னத்துரை நாட்டியக்காரி ஸ்ரீப்ரியாவின் மீது மோகம் கொள்ள, ஸ்ரீப்ரியா சிவாஜி மீது ப்ரியம் வைக்க, சிவாஜி தன்னை வெறுக்கும் பால்ய கால சகி மாதவியின் அன்புக்கு ஆசைப்பட, மாதவி லாயர் ஜெய் கணேஷைத் தன் பங்கிற்குக் காதலிக்கிறார் என்று போகும் சிக்கலான கதை என்றாலும் சுவாரஸ்யமான திருப்பங்கள் இல்லாமல் போரடிக்கிறது.

உடன் பிறவாத் தங்கை மீது உயிரையே வைக்கின்ற; நாட்டியக்காரியையும் அபிமானிக்கின்ற; எங்கிருந்தோ வந்த ஜெ. கணேஷைத் தம்பியாக்கிக் கொள்கிற கருணை மிகுந்த பல போஸ்களில் சிவாஜி. நீட்டி நீட்டி எதுகை மோனையில் தத்துவ — பாச வசனங்களை சிவாஜிக்கென்றே எழுதுவதில் ஏ. எல். நாராயணன் சமர்த்தர் — இதிலும்.

வைரம் சாப்பிட்டு ஸ்ரீப்ரியா சிவாஜிக்காக சாக ரவுடியிடம் குத்துப்பட்டு, சிவாஜி மாதவிக்காகச் சாக — முடிவில் அமர காவியம்.

நாகேஷின் காமெடி ஆறுதல். ரவுடி சின்னத்துரை (வஜ்ரமுனி — கன்னடம்) நல்ல செலக்ஷன் — சிவாஜியின் காஸ்ட்யூம்கள் இதன் எதிர் வகை.

சுயநலமில்லாதவர் விஸ்வநாதன்—இல்லாவிட்டால் தன் சொந்தப் படத்துக்கு இப்படி சிரத்தை இல்லாமல் செய்திருப்பாரா?

சில 'த்ரில் கனவுகள்' நீங்கலாக ப்ளாஷ் பேக், அது, இது என்று அலட்டிக்கொள்ளாமல் 'ஒரே ஒரு ஊரில்' என்று ஆரம்பித்து கதை சொல்கிறார் டைரக்டர் அமிர்தம். இந்திப் படத்தை அமிதாப்பின் கம்பீரம் காப்பாற்றியது. தமிழில்?

—''சிந்து ஜீவா''

கத்தில் ஆழ்ந்திருந்தார். வஸந்த் விரோதத்துடன் நடந்து மூலே திரும்பி மற்றொரு ஏணி எடுத்துக் கொண்டு எதிர்ப் பக்கத்தில் அதை நகர்த்தி வின்ஸ்லோவின் டிக்ஷனரியை விலக்கி இனியாவை மறுபடி பார்த்தான். அவள் திடுக்கிட்டு ம்ஹூம் என்று தலையாட்டினாள்.

வஸந்த் புருவத்தை உயர்த்தி, கைக் குட்டையால் கண்களை ஒத்திக்கொண்டான். இனியா தலையை உயர்த்தி, புருவத்தால் என்ன என்றாள். வஸந்த் விரல்களைச் சேர்த்துக்கொண்டு சாப்பிடுவது போல் பாவனை செய்து மேலே விரல் காட்டினான். அவள் வருகிறேன் என்று தலையாட்டினாள். வஸந்த் வாயில் பின் விரல் வைத்துச் சப்தமின்றி விசிலடித்தான்.

முதல் மாடியில் இருந்த காண்டீனில் வஸந்த் காத்திருக்க, இனியா அவசர அவசரமாக வந்தாள்.

''அப்பாவுக்கு டிமிக்கி கொடுத்துவிட்டு வந்திருக்கேன். அஞ்சு நிமிஷம்தான் பேச முடியும்.... என்ன விஷயம் சொல்லித் தொலை.''

''இனியா! அஞ்சு நிமிஷத்திலே என் மனசின் அல்லல்களை எப்படிச் சொல்ல முடியும்? ஆறு நிமிஷம் வேணும்... இன்னி! என்மனம் கவர்ந்த கன்னி... இன்னும் கன்னிதானே நீ.......!''

''வெத்துப் பேச்சுன்னா நான் ஆட்டத்துக்கு வரலே. போறேன்!''

''அய்யோ போகாதே! ஜன்னலைத் திறந்து குதிச்சுட்டு நானே பேப்பர்லே வந்துடுவேன். இன்னி நீ செய்யறது நியாயமா? லோக்கல் தோத்தோ நாய் மாதிரி உன் கூடவே சுத்திக்கிட்டிருக்கேன், அமெரிக்காங்கறியே!''

''அப்பாதானே சொல்றார். அப்பா பேச்சை என்னாலே மீற முடியாது வஸந்த்!''

''ஐயகோ! வள்ளுவரே சொல்லியிருக்காரே, ''எப்பொருள் யார் யார் வாய்க் கேட்பினும் அப்பொருள் அப்பனின் சொல்லென்றால் மீறு''ன்னு....

''வஸந்த்! நீ என்னை நினைச்சுப்பியா?''

''என்ன கேள்வி இனியா? எனக்கு பிளட் பிரஷர் எடுத்துப் பாரு ஸிஸ்டாலிக் டயஸ்டாலிக் ரெண்டுமே இனியாங்கும்!''

- ''என் கல்யாணத்துக்குத் தனியா மெள்ள நடந்து வந்து 'எங்கிருந்தாலும் வாழ்க'ன்னு ஒரு பூச்செண்டைக் கொடுத்திட்டு விழியோரக் கண்ணீரைத் துடைச்சுண்டு ஃபேட் அவுட் ஆயிடியா?''

''என்னது! அதுக்கு வேற ஆளைப் பாரு! 'நிறுத்து இந்தக் கல்யாணத்தை'ன்னு புயல் கணக்கா குதிரைலவந்து ஒரு லாவு லாவிண்டு போவேன்! குதிரை நுழையற மண்டபமாப் பார்த்து வை.''

''கல்யாண மண்டபம் புக் பண்ணியாச்சே வஸந்த்!''

''இனியா, இத பாரு! என் கையைப் புடிச்சுண்டு வாழ்க்கையின் ஓரத்துக்கு ஸ்லோ மோஷன்ல ஓடத் தயாரா நீ?''

''தயார் வஸந்த்!''

''கவலைப்படாதே. கல்யாணத்தை நிறுத்திடறேன். வாத்தியார் அட்ரஸ் கொடு. பால்ல பர்கோலாக்ஸ் கலந்துடறேன். நாயனத்தை சீவாளியைப் பிடுங்கிடறேன். ஊர்கோலக் காரைப் பஞ்சர் பண்ணிடறேன். நீ என்ன பண்றே, மாப்பிள்ளை வரான் பாரு அவன் கிட்ட எனக்கு ரகசியமா ஒரு இடத்திலே தழும்புன்னு சொல்லிடு...''

''உனக்குத் தழும்பா இருந்தா அவருக்கு என்ன?''

''எனக்கு இல்லே, உனக்கு! இனியாவுக்கு'' என்று அவளைத் தொட்டான்.

''தொடாதே வஸந்த்!''

''ஏன் இனியா புல்லரிக்குதா?''

''இல்லே. அப்பா என்னைத் தேடிக்கிட்டு மேஜை மேஜையா வந்துக்கிட்டிருக்கார்.''

வஸந்த் உடனே அவளை விட்டு விட்டான்.

''வாங்க ஸார்...காப்பிசாப்பிடறீங்களா?''

''இனியா இங்கேயா இருக்கே?''

''கொஞ்சம் போர் அடிச்சதுப்பா!''...

''உட்காருங்க ஸார்!''

பேராசிரியர் உட்காராமல் ''இல்லேப்பா. நான் யூனிவர்ஸிட்டி போகணும். அப்புறம் கல்யாண ஏற்பாடு எல்லாம் பாக்கி இருக்கு. இனியா, வஸந்த் கிட்டச் சொல்லிட்டஇல்லே, ஒத்தாசைக்கு வரும்படி?''

''அதைப் பத்தித்தான் பேசிட்டிருந்தோம் ஸார்... எல்லாம் சுபமா முடிஞ்சுரும் கவலைப்படாதீங்க....''

''வா, இனியா!''

''போ, இனியா, பயப்படாமப் போ. நான் பாத்துக்கறேன்!''

அவர்கள் சென்றதும் வஸந்த் சற்று நேரம் மிச்சமிருந்த காப்பியை உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தான். பில் கொண்டு வந்த சர்வரிடம், ''வாழ்க்கையே மாயமய்யா!'' என்று சொல்லிவிட்டு, மறுபடியும் லைப்ரரிக்குள் நுழைந்தான்.

''சோடியம்! இதோ வர்றேன்!''

முதலில் கெமிஸ்ட்ரி இன்ஆர்கானிக் பகுதியில் பார்த்தான். அப்புறம் இண்டஸ்ட்ரியல் யூஸஸ் ஆஃப் ஸோடியம் பார்த்தான். அதன் பின் நேஷனல் கெமிக்கல் லாபரேட்டரியின் ஆராய்ச்சிக் குறிப்புக்களை வருஷாந்திர அனுபந்தங்களைப் பார்த்தான்.

''அட!''

சட்டென்று நிமிர்ந்தான்.

''இதில எப்படி ராஜ ராஜன் இன்னு வருது?''

(தொடரும்)

''ஏன் சார், உங்களுக்குத்தான் மாளிகைப் பாக்கி ஒன்னுமில்லே! பின்னே ஏன் வீட்டுகளுக் கடன் கேட்டு வந்து சத்தம் போடச் சொல்றீங்க?''

''விருந்தாளிகளைக் கிளப்புறதுக்கு இது ஒரு வழிதான் பாக்கி இருக்கு!''



# சேமிக்கும் பழக்கத்தை மேற்கொள்ளுங்கள்



அதுவே
உங்கள் வாழ்வின்
செல்வச் செழுமைக்கு
அடித்தளமாகும்

உங்கள்
வாழ்வு
ஒளிமயமாக விளங்கிட
லக்ஷ்மி விலாஸ்
பாங்கிற்கு
விஜயம்
செய்திடுவீர்

அருகாமையில் உள்ள எங்கள் வங்கியின் கிளைக்கு இன்றே விஜயம் செய்யுங்கள். வளமான வாழ்க்கைக்கு ஏற்ற சேமிப்புத் திட்டங்களை தேர்ந்தெடுக்க எங்களது மேனேஜர் வழிகாட்டுவார்.

**சிறப்பு சேமிப்புத் திட்டங்கள் :**

- பொன்விழா ரொக்கப் பத்திரம்
- சுழல் முதலீட்டுத் திட்டம்
- ரெகரிங் டிபாசிட்
- லக்ஷ்மி தின சேமிப்பு.

அன்னியச் செலாவணியில்
வர்த்தகம் செய்ய
அங்கீகாரம் பெற்றவர்கள்.

## லக்ஷ்மி விலாஸ் பாங்க் லிமிடெட்

பதிவு அலுவலகம்: கரூர் 639 001
நிர்வாக அலுவலகம்: சென்னை 600 086

என்.வி. ஸ்ரீநிவாசன்
சேர்மன்

SUSAK LVB 005










இது ஊனமுற்றோர் நலன் ஆண்டல்லவா? ஊனமுற்றவர்களைக் கதா பாத்திரங்களாகக் கொண்டு எடுக்கப் பட்ட சில திரைப்படங்களை மனத்தில் அசை போடலாமே? இந்தப் புகைப்படங்களைப் பார்த்ததும் திரைப் படங்கள் நினைவுக்கு வருகின்றனவா? இல்லையெனில் புரட்டுங்கள் 47ம் பக்கம்




# நடிப்பிலே ஊனமில்லை!



# ரசிகமணி ரசித்த பண்பாடு

பிறரை மனமாரப் பாராட்டுவது என்பது கலைகளில் எல்லாம் பெரிய கலையாகும். ஒருவருக்குப் படிப்பு வந்துவிடும். பாண்டித்தியம், புலமை வந்துவிடும். ஆனால் மனம் திறந்து இன்னொருவரைப் பாராட்டுகிற பண்புஇருக்கிறதே அது எளிதில் வருவதில்லை. அதற்குப் படிப்பு மட்டும் போதாது. பண்பாடு வேண்டும்! அப்படிப்பட்ட உயர்ந்த பண்பாட்டிலும் ஒரு ரசிகமணியாக விளங்கினார் டி. கே. சி.

வேலம்மாள் (என் நண்பர் நீதிபதி மகராஜனின் தமக்கையார்) அவர்களின் கோலம் போடும் கலையை ரசிகமணி எப்படி அனுபவிக்கிறார் பாருங்கள்:

"இங்கேயும் வீடுகளில் எத்தனையோ கோலங்கள் போடத்தான் செய்கிறார்கள். நூற்றுக் கணக்கான பொட்டுகள், நூற்றுக் கணக்கான கோடுகள் எல்லாம் சேர்ந்து ஒரே கசாமுசா!

வேலம்மாள் ரகத்தில் எளிமையும் கருத்தும் அழகும் சேர்ந்து கலையாய் விளங்கும். அந்தக் கலையை உணருவதற்கு மற்றக் கோலங்களையும் பார்க்க வேண்டும்.

பாரதியும் தேசிக விநாயகம் பிள்ளையும் கவிஞர்கள் ஆனதால், எளிமையைக் கையாண்டிருக்கிறார்கள். விஷயத்தை இப்படிச் சொல்லுவதை விட்டு விட்டு, எல்லாருக்கும் விளங்க வேண்டும் என்பதற்காக லேசாய் எழுதியிருக்கிறார்கள் என்று மாறாய்ச் சொல்லுகிறார்கள்! கவிஞர்கள் தங்களுக்கே விளங்க வேண்டும் அல்லவா, அதற்காக எளிமையைக் கையாளுகிறார்கள் என்று சொன்னால் பொருத்தமாய் இருக்கும்.

பூண்டுகள் (செடிகள்) கூடக் காரியத்தைச் சாதித்துக் கொள்வதற்காக எளிமையைக் கையாண்டிருக்கின்றன. எட்டுத் திசையிலிருந்தும் பதினாறு கோணத்திலிருந்தும் மகரந்தத் தூள்களை வண்டுகள் கொண்டு வரவேண்டும் என்பதற்காகப் பதினாறு இதழ்களையா விரிக்கிறது? ஐந்து இதழ் போதும் என்றுதானே வைத்துக் கொண்டது?

Radial symmetry ஐந்து பட்டங்களால் ஆகிவிடுகிறது. பல அடுக்குப் பூக்கள் எல்லாம் கஷ்டப்படுகிற பூக்கள்தான். கோலத்தை எளிமையுடன் போடவில்லை அவைகள்!"

பெண்கள் கோலம் இடுகிற கலையைப் பற்றிய பாராட்டு இந்தக் கடிதம். இது மட்டும் இல்லை. சாமானியமான ஒரு காரியத்தையுமே திருப்தியாகச் செய்துவிட்டால் டி. கே. சி.க்குப் போதும். உடனே மனமாரப் பாராட்ட ஆரம்பித்து விடுவார்.

ஒரு சமயம் நல்ல அவரைக்காய் அனுப்பும்படி நான் திருச்சியிலிருந்தபோது எனக்கு எழுதினார் டி. கே. சி. அவரைக் காய் கிடைத்ததும் அவர் எழுதிய கடிதத்தைப் பாருங்கள்:

"உரிய நேரத்தில் அவரைக் காய் குற்றாலத்துக்கு வந்து சேர்ந்தது. அதைப் பற்றித்தான் இங்கே பேச்செல்லாம்! இப்படியும் அவரைக்காய் கடையில் உண்டா என்றுதான் கேட்கிறார்கள். சோமு அல்லவா அனுப்பியிருக்கிறான் என்று அவர்களுக்குச் சொல்லுகிறேன்.

இதுதான் அவரைக்காய், மற்றவைஎல்லாம் மொச்சைக் காய்கள், விசுவாமித்திரங்கள்!



ஆர். கே. சண்முகம் செட்டியார்

பேய்க் கருமைப் சுவைத்துச் சக்கை யாடுகிறவர்கள் உண்டு தானே? கம்பர் பாடல் இன்னது என்றுஉணராமலே புராண செய்யுள்களைச் சக்கையாடுகிறவர்களாய்த் தானே இருக்கிறார்கள்!"

கோலத்திலிருந்து, பாடலி தாவர இயலுக்கும், அவரைக்காயிலிருந்து கம்பருக்குமாக ரசிகமணியின் உள்ளம் விரிகிறது.

இதுபோலவே நண்பர்களின் வீட்டுக்கு வந்து தங்கினார் என்றால், அங்கேயுள்ள குடும்பத்தினரின் அன்பை மட்டுமல்லாமல், அந்த வீட்டின் சூழலையும் கலை நேர்த்தியையும் அனுபவித்துக் கொண்டேயிருப்பார் டி. கே. சி.

கோயம்புத்தூரில், ஆர். கே. சண்முகம் செட்டியார் அவர்கள் வீட்டில் தங்கியிருந்த போது எழுதுகிறார்:

"சாப்பாடு எனக்கேற்றவாறாகச் செய்தாகிறது. அதில் மிக்கச் சிரத்தை எடுத்துக் கொள்கிறார்கள். ஜாகையோ அரண்மனை. சகல வசதிகளும் அமைந்திருக்கின்றன. எல்லாம் அமெரிக்காவில் உள்ள மோஸ்தரில் இருக்கின்றன.







காலைக் காப்பி, பலகாரம் சாப்பிடுவதும் இரவு சாப்பிடுவதும் மேஜையில்தான். சௌகரியமான வெள்ளித் தட்டுக்கள். பதினைந்து அங்குலம் குறுக்களவுள்ள தட்டுக்கள். அந்த அளவுக்குக் குறைந்திருந்தால் சௌகரியமாகச் சாப்பிட முடியாது என்று தோன்றுகிறது.

இதில் அல்ல விசித்திரம். மேஜைக்கு ஒரு மேல்ப பலகை இருக்கிறதே அது ஒரே தோதகத்திப் பலகை. ஐந்து அடி அகலம். இருபது அடி நீளம். அதன் மேல் கனத்த கண்ணாடி இரண்டாகப் போட்டிருக்கிறது.

பலகை வந்த மரம் ஆயிரத்து ஐநூறு வருஷமாக வளர்ந்த மரம் என்பதாகக் கணக்கு. வருஷம் நீளம் அகலம் எல்லாம் சாப்பிட்டுக் கொண்டிருக்கும் போதே அனுபவிக்க வேண்டிய காரியம்.

இது போக இமயத்திலிருந்து ஈழம் வரை உள்ள பிரதேசங்களில் கிடைத்த அற்புதமான கலைச் செல்வங்கள் பல! வெகு அழகாக வேலைப்பாடு அமைந்த பலகைப் பீடங்கள், தட்டிகள், புத்த விக்ரகங்கள், நடராஜ மூர்த்திகள், தீபங்கள், அபூர்வமான படங்கள் எல்லாம் வேண்டிய மட்டும்! பார்த்துப் பார்த்து அனுபவிக்க வேண்டியது. உள்ளம் விரிவு அடைய வேண்டியது.

புத்தகம் என்றால் பிரமாதமான லைப்ரரி.

இவைகளுக்கெல்லாம் ஊடே நான் நடமாடிக் கொண்டிருக்கிறேன். மனசுக்குத் தனி உற்சாகம். லக்ஷ்மி தேவியை எப்படிக் கலைமகளுக்குத் தொண்டு செய்யச் செய்திருக்கிறது என்று வியந்து கொண்டேயிருக்கிறேன்.

சாயங்காலம் ஆறு மணி முதல் ஏழு மணி வரை கம்ப ராமாயணத்தோடு பொழுது போக்குகிறது. முப்பது பேர் வருகிறார்கள். நன்றாய் அனுபவிக்கிறார்கள்.

இரவுச் சாப்பாட்டுக்கு மேல் செட்டியார் அவர்கள், அவர்களுடைய உற்ற நண்பர் பழனிச்சாமி நாயுடு அவர்கள் இருவருடனும் தமிழ்ப் பண்பாட்டின் உயர்ந்த சிகரங்களைப் பற்றிப்பேசி வருகிறேன். ஒரே வியப்புத் தான் அவர்களுக்கு!

தமிழ்ப் பண்பாடும், தமிழ்க் கவியும் ஒப்பற்ற வஸ்துக்கள்தான் என்பதை இருவரும் அங்கீகரித்து ரொம்ப ரொம்ப அனுபவிக்கிறார்கள்.

இப்படி இரண்டு பேருக்கு உணர்ச்சி ஏற்படுத்துவதற்காகக் கோவைக்கா வரலாம், இமயத்துக்கே போகலாம்!''

தமிழ்ப் பண்பாட்டைத் தான் அனுபவித்து வியந்து பாராட்டுவதோடு மட்டுமல்ல. பிறர் அதை அனுபவிப்பதையும் பார்த்து அனுபவிக்கிறவர் ரசிகமணி!

**மீ.ப.சோமு**



பணத்தை ஏன் விரயமாக்குகிறீர்கள்
எவ்விதத்திலும் சிறப்பில்லாத 'விலையுயர்ந்த'
துலக்கும் பவுடரை வாங்கி
வாங்குவீர்
பிஜ்
மற்றதைவிட விலையில் 25% குறைவு
இருப்பினும் நன்றாகவே துலக்குகிறது
உங்களுடைய சிறந்த பீங்கான், சமையலறைப் பாத்திரங்களுக்கு நம்பகமானது
5-refill pack
BIZ
multi-purpose
CLEANING POWDER
WITH SUPER DETERGENT
MADE IN INDIA
கோத்ரெஜ்
தயாரிப்பு
CASGS-132-183 TAM






## 25. சரித்திரம் மாறத் தொடங்குகிறது

மக்கள் சினிமாவைச் சிந்திக்கிறார்கள். கடந்த இருபது ஆண்டுகளாகவே வாக்களிப் பதில் அவர்களுக்கு ஒரு தெளிவு ஏற்பட்டு விட்டது. 1957க்கு முன்பெல்லாம் ஒரு தொகுதியில் நாலு பெரிய மனிதர்களைப் பிடித்து வைத்துக் கொண்டால் அத்தனை வாக்குகளையும் வாங்கிவிட முடியும். மேய்ப் பவனுக்கு அடங்கிய வெள்ளாடுகளைப் போலத்தான் அவர்கள் இருந்தார்கள். ஆனால் நாளடைவில் அவர்களிடையே ஒரு பொது அறிவு பரவிற்று.

எதற்கு வாக்களிப்பது, யாருக்கு வாக் களிப்பது என்பதில் அவர்களுடைய கண் ணோட்டம் வேங்கடத்திலிருந்து குமரிவரை ஒரே மாதிரி மாறிற்று. அதனால்தான் தமிழ் நாட்டில் கலப்படமான மந்திரி சபை ஏற்பட வில்லை. சரியோ, தவறோ, ஒரு கட்சி மந்திரி சபையையே அவர்கள் உருவாக்கினார்கள்.

1967ல் தி. மு. க.வுக்கு வாக்களித்த மக்கள்தான் 1968ல் நாகர்கோவிலிலும் இருந்தார்கள். அவர்கள் ஒட்டு மொத்தமாக காமராஜருக்கு வாக்களித்தார்கள்.

எதிர்ப்புச் சக்திகள் தலை குனிந்து படுக்கும் படி காமராஜரின் வெற்றி அமைந்தது. ஒரு லட்சத்துக்கும் மேற்பட்ட வாக்கு வித்தியாசத்தில் காமராஜர் வெற்றி பெற் றார்.

இந்த வெற்றியை அவனும் ஜெயகாந் தனும் சென்னையில் கொண்டாடினார்கள்.

அவர்களுக்குச் சிலஅற்புதமான நண்பர்கள் உண்டு. சிவகாசி காரனேஷன் லித்தோ வொர்க்ஸ் ராஜசபை, சேர்மன் ஏ.எம். எஸ். கணேசன் ஆகியோரே அவர்கள்.

அவர்களோடு நான்கு நாட்கள் உற்சாகத் தில் விழாக் கொண்டாடினார்கள்.

காங்கிரஸ் ஒரேயடியாகப் படுத்துவிட வில்லை, சந்தர்ப்பம் வரும்போது அது எழுந்து நிற்கும் என்பதை மக்கள் உணர்ந் தார்கள். காங்கிரஸ் தொண்டர்கள் புது ரத்தம் பாய்ந்தவர்களாக ஆனார்கள்.

இந்த வெற்றிக்குப் பிறகு அவன் எழுத்துக் களில் கவனம் செலுத்தத் தொடங்கினான். அவன் நடத்தி வந்த 'கண்ணதாசன்' பத் திரிகை ஒரு சரித்திரத்தையே உருவாக்கிக் கொண்டிருந்தது. 'தென்றல்'; 'முல்லை' யைப் போலவே தமிழ்ப் பத்திரிகை உலகுக்கு அதுவும் ஒரு புதுப் பாதை காட்டிற்று.

பெண்களின் படங்களையும், காமக் கவர்ச் சிக் கதைகளையும், வேடிக்கைத் துணுக்கு களையும் போட்டு விற்பதுதானே தமிழ்ப் பத்திரிகைகளின் தர்மம்! எவ்வளவு பெரிய தலைவர்கள் பத்திரிகை நடத்தினாலும் இந்தக் கோமாளித்தனத்திலிருந்து விலக முடிய வில்லையே!

ஆனால் 'கண்ணதாசன்' இதழ் ஒரு போதும் பெண்களின் படத்தை அட்டையில் போட்டதில்லை. ஆராய்ச்சிக்குரிய துணுக்கு களை வெளியிட்டிருக்கிறது. வரலாற்றுச் சம் பவங்களைச் சுவைபடத் தந்திருக்கிறது. மரபுக் கவிதை, புதுக் கவிதை இரண்டுக்கும் அதிகப் பக்கங்களை ஒதுக்கி யிருக்கிறது.

பல கல்லூரிகளில் 'கண்ணதாசன்' இத ழைப் பார்த்துக் கல்லூரிப் பாடங்களில் தெளிவு பெற்றிருக்கிறார்கள் மாணவர்கள்.

அதிகபட்சம் பதினைந்தாயிரம் பிரதி களைத்தான் அது எட்டியது என்றாலும், பதினைந்தாயிரம் அறிவாளிகளின் கை களுக்குச் சென்று பாதுகாக்கப்படும் பொக் கிஷம் ஆயிற்று.

அதில் அவன் எழுதியவை அனைத்தும் படித்துப் பார்க்கும்போது அவனுக்கே உற் சாகத்தைத் தந்தன.

'எழுதுகோல் தெய்வம்' என் எழுத்தும் தெய்வம்' என்று அவன் நிறைய எழுத ஆரம்பித்தான்.

வளமான கற்பனையும், மனோ தர்மமும் அற்புதமான சொல்லாட்சியும் ஒரு மனி தனுக்கு அமைந்து விட்டால் அவனுக்குப் பெண்டாட்டி பிள்ளைகள் கூடத் தேவை யில்லை. எழுத்தாளனாக இருப்பதில் சர்ச்சிலை விட அவனுக்கு உற்சாகம் அதிகம்.

அந்தக் கண்ணதாசன் இதழில் அவன் எழுதியவைதான் இன்று பல்வேறு புத்த கங்களாக வெளிவந்துள்ளன.

இந்தக் காலத்திலும் அவனுக்கு யாரும் விசுவாசமாக இருக்கவில்லை.

நிதானமாக உட்கார்ந்து கேட்கும் போது மலைக்க வைக்கும் அளவுக்கு அவனைச் சுற்றிலும் தவறுகள் நிகழ்ந்துள்ளன. எதையும் கண்டு கொள்ளாமல், எழுத்திலும் மதுவிலும், மங்கையிலுமாக அவன் மூழ்கி இருந்தான்.

உடம்பு திமிர் பிடித்திருந்தது. உள்ளம் எதையும் எழுத முடியும் என்று கோடு காட்டிற்று. ஆரோக்கியம் எப்பொழுதும் இப்படியே இருக்கும் என்ற நம்பிக்கை இருந்தது. வலிவுடைய ஆண் மகனாகவும் மகிமை மிக்க எழுத்தாளனாகவும் தன்னிகரற்ற மகா கவிஞனாகவும் வளர வேண்டும் என்ற உற்சாகம் இருந்தது.

இந்தக் காலத்தில் வாழ்க்கை முறைகளை ஒழுங்குபடுத்திக் கொண்டு இன்னும் அதிகம் அவன் எழுதியிருந்தால், அந்த எழுத்து அவனைக் கோபுரத்தின் உச்சிக்குக் கொண்டு சேர்த்திருக்கும். ஆனால் அவன்அனுபவித்த நேரங்களை விட, எழுதிய நேரம் குறைவு.

இதுதான் அவன் கால நேர அட்டவணை:

காலை 6.30 மணிக்கு எழுந்திருப்பான். அரை மணி நேரத்தில் காலைக் கடன்களை முடித்துக் குளித்து விடுவான். பிறகு வரவு செலவுகள், கடன் வாங்கல், கொடுக்கல் என்று அலைவான்.

ஒன்பது மணிக்குப் பலகாரம். பத்து மணிக்கு எழுதத் தொடங்குவான். பன்னிரண்டு மணிக்குக் குடிக்கத் தொடங்குவான். மூன்று மணிக்குச் சாப்பிடுவான். மூன்றரை மணிக்குத் தூங்க ஆரம்பித்தால் ஆறரை மணிக்கு எழுவான்.

குளித்துத் தயாராகி ஏழு மணிக்கு எழுத ஆரம்பிப்பான். ஒன்பது மணிக்கு மீண்டும் குடிக்கத் தொடங்குவான்.

அவனது உலகம் ஒரு மணி வரையிலும் ஆனந்தமயமாக இருக்கும். எந்தக் காரணம் கொண்டும் ஒரு மணியைத் தாண்டாதபடி தூங்கி விடுவான்.

அவனது நூற்றுக் கணக்கான பாடல்களையும் கவிதைகளையும் கேட்ட பல பெண்கள் அந்த நேரத்தில் அவன் வாழ்க்கையில் வந்தார்கள். அந்த உமர்கையாமை உட்கார வைத்து அவர்களே சுவையாகப் பாடிக் கொண்டிருப்பார்கள்.

அன்புக்குரிய சொந்தங்கள் எதுவுமே இல்லாமல் போனதால் இந்த ஆரவார வாழ்க்கை ஒரு நியாயமாகி விட்டது.

கல்யாண வீட்டு மேள தாளச் சத்தத்தில் கண்டதைப் பேசினாலும் காதில் விழாது. ஆனால் அவனது வாழ்க்கையில் இரவில் செய்யும் தவறுகள் காலையில் கண் முன்னால் தோன்றும்; உச்சி வெய்யில் வருவதற்குள்ளாகவே மாறிவிடும்.

அளப்பரிய அன்பு காட்டிச் சில பெண்கள் கடிதம் எழுதுவார்கள். அவற்றைப் பய பக்தியோடு படித்துப் பார்ப்பான்.

அப்போதைய அவனுடைய வாழ்க்கையில் பங்குபெற விரும்பிய பெண்கள் சிலர் உண்டு. ஆனால் பெண்மையைப் பற்றிச் சித்தர்கள் பாடிய ஞானமே, அவனுக்குள் தோன்றிக் கொண்டிருந்தது.

இது அரை குறை ஞானம்தான். சிற்றின்ப வாழ்க்கையில் நப்பாசை வைத்துக் கொண்டே பேரின்பத்தை நாடுவது எப்படி?

வலிப்பார் இல்லாத துடுப்போடு ஆற்றின் வயப்பட்டு ஓடும் தோணி போல் அவன் போய்க் கொண்டிருந்தான்.

சொந்த வாழ்க்கையில் எதிலும் ஒரு திடமான முடிவில்லை. அப்படி ஒரு சித்தம் அவனுக்கு இருந்திருக்குமானால் இவ்வளவு தன்னிரக்கக் கூச்சல்களுக்கு அவசியம் இருந்திருக்காது.

கிராமங்களில் பயத்தைத் தெளிவித்துக் கொள்வதற்காக இரவிலே பங்களாவாசிகள் அதிகார தொனி காட்டுவது போல, தனக்கிருந்த துயரங்களை அவன் அரசியலிலும் தீர்த்துக் கொண்டான்.

நாகர்கோவில் வெற்றிக்குப் பிறகு காமராஜர் புது மனிதராகவே காணப்பட்டார். அவரது பேச்சு முழுவதும் அகில இந்திய அரசியல் பற்றியதாகவே இருந்தது.

முன்பு அவர் காங்கிரஸ் தலைவரான பிறகு கறுப்புப் பணம், சோஷலிஸம் பற்றித் தீவிரமாகப் பேசி நடவடிக்கை எடுக்கவும் வைத்திருந்தார். அதனால் கோபமுற்ற பல பத்திரிகை முதலாளிகள் அவருக்கு எல்லா வகைகளிலும் தொல்லை கொடுத்திருந்தார்கள். விருதுநகர்த் தோல்விக்கு அதுதான் முக்கிய காரணம்.

இப்போது அவர்களை ஒரு கை பார்ப்பது என அவர் முடிவு கட்டினார். ஆனால் அவர் செல்லும் அளவுக்கு இந்திரா வேகமாகச் செல்லவில்லை என்பது போல் அவருக்குத் தோன்றிற்று. நாகர்கோவிலிலே அவர் வெற்றி பெற்றதே இந்திராவுக்குப் பிடிக்கவில்லை என்றும் கூறப்பட்டது. இந்த வதந்திகள் அவருக்கும் இந்திராவுக்கும் இடையிலே பிணக்கு இருப்பதாகவே காட்டின.

அவர் நண்பர்களோடு தனியாகப் பேசிக் கொண்டிருக்கும்போது,இந்திராவின் மீதும் அதிருப்தியை ஜாடையாகவெளிப்படுத்தினர்.

ஏதோ நடந்து கொண்டிருக்கிறது என்பது மட்டுமே அவனுக்குப் புரிந்தது. ஆயினும் காங்கிரஸ் மேலிட நிலவரம் புகை கூட வெளியே வராமல் மூடப்பட்டிருந்தது.

காங்கிரசில் ஏற்படப் போகும் பிளவுகளுக்குத் தோதாகத் தமிழக அரசியலை மாற்ற வேண்டும் என்று இறைவன் விரும்பினானோ என்னவோ, அறிஞர் அண்ணா அவர்களின் உடல் நலம் அதிகம் கெடத் தொடங்கிற்று. அந்த நேரத்திலும் அவர் அதிகம் விரும்பியது அவனையே. கூட இருந்த நண்பர்களிடமெல்லாம், ''நான் எவ்வளவோ சொல்லிவிட்டேன்; நீங்கள் இன்னும் கண்ணதாசனைக் கூட்டி வரவில்லை'' என்று கோபப்பட்டாராம்.

முடிவில் அவர் திருவண்ணாமலை தருமலிங்கத்தையும், மன்னை நாராயணசாமியையும் அவனிடம் அனுப்பி வைத்தார்.

ஆறரை மணிக்கு எழுந்திருக்கும் அவனது வீட்டுக்கு ஐந்தரை மணிக்கே நண்பர்கள் இருவரும் வந்து சேர்ந்தார்கள். (வளரும்)



இனிசி பாத்திரம் தேய்க்க துணி தோய்க்க என்ன சம்பளம் கேட்குறே?''
''மாசம் அம்பது ரூபாய், ஊர்க்காருகளுக்குச் சம்பளம் தனி!''



- அ. இராமதாஸ்





● கோவையில் பழைய பேப்பர்க் கடையொன் றில் கண்ட புதுக் குறள்:

> கற்க கசடற கற்க கற்பவை கற்றபின்
> எடை போட்டு விற்க.

● ஒரு பள்ளிக்குச் சொந்தமான எம். எஸ். டபிள்யூ 1261 எண் கொண்ட வேன் ஒன்றில், ''என்னைப் பலத்தால் இடைக்கட்டி என் வழியைச் செவ்வைப்படுத்துகிறவர் தேவனே' என்ற வாசகம் காணப்பட்டது. 'இடைக் கட்டி' என்றால் என்ன பொருள்?



● 18-ம் எண் பேருந்து. டி. வி. எஸ். ஸ்டாப். எட்டு வயதுச் சிறுமி பஸ்ஸில் ஏறினாள். பல பயணிகளுக்கு 'கிச்சு கிச்சு' மூட்டினாள். முது கைச் சொறிந்தாள். பாசத்தோடு கையைப் பிடித்து 'விளையாடினாள். முடிவில் கைகளை ஏந்தினாள்.' பிச்சையில் இது 'லேட்டஸ்ட்' விதமோ?

● கோடம்பாக்கம் அருகே அமைந்துள்ள ஒரு பகுதியின் பெயர் 'அட்டையில்லா நகர்'. இப்பெயருக்குக் காரணம் எதுவோ?

● மேஜர் சுந்தரராஜன் வீட்டுக்கு எப் போது யார் சென்றாலும் சூடாகக் காப்பி கிடைக்கும். இதில் என்ன விசேஷம் என் கிறீர்களா? நீங்கள் காப்பி சாப்பிடும்போதே உங்களுக்காகக் காரோட்டி வந்த டிரை வருக்கும் காப்பி வழங்கப்படத் தனி ஏற் பாடுகளை மேஜர் செய்திருப்பதுதான் விசேஷம்.

● இராமநாதபுரம் மாவட்டத்தைச் சார்ந்த காரியாபட்டி. காரில் சென்றபோது ஆங்காங்கே சாலையில் நெல் நாற்றுக் கட்டுகள் சில நிறுத்தி வைக்கப்பட்டிருந்தன. அதைக் கண்டு காரை நிறுத்தினால், வயல் வேலைகளில் ஈடுபட்டுள்ள சிறுவர், பெண் தொழிலா ளர்கள் ஓடோடி வந்து, குலவை ஒலி எழுப்பு கிறார்கள். அவர்களுக்கு நாம் ஏதாவது இனம் தரவேண்டுமாம்...

தொகுப்பு: யெஸ்ஜி

# பார்த்தோம் சொல்கிறோம்!







# "நான்கு சுவர்களுக்கிடையில் நான் ராஜா!"



✖ "அன்றைக்கு என் பூஜை அறையாக இருந்ததும் இதுவே தான்."

✖ "இங்கே ஒரு தடுப்பு ஹாலைப் பிரித்து விருந்தினருக்குத் தனி அறைஉண்டுபண்ணிற்று..."

மூன்னாள் முதல்வர் திரு மு. கருணாநிதி வீட்டுக்கு நாலைந்து வீடுகள் தள்ளிக் காரை விட்டு இறங்கினார் ராஜா. ஆம், ஸ்ரீகாந்தைச் செல்லமாக அவரைத் தெரிந்தவர்கள் அழைப்பது அப்படித்தான். அவர் இருந்த வீட்டில் இப்பொழுது இருப்பவர்கள் வீட்டின் சொந்தக்காரர்களே. உள்ளே நுழைந்ததும் வலது பக்கத்தில் ஓர் அறை.

"இதுதான் சலன், என் ரூம்! இங்கே இந்தப் பக்கத்தில் ஒரு சிறிய புத்தக ஷெல்ஃப் இருக்கும். அந்தப் பக்கத்தில் சோபா-கம் பெட். தொலை பேசி, டீ. வி. எல்லாமே இந்த அறையில்தான். என் படுக்கையும் இங்குதான். மற்றவர்களை வரவேற்கும் அறையும் இதுதான். இந்த நான்கு சுவர்களுக்குள் நான் ராஜாவாக இருந்தேன்."

அடுத்து நாம் ஒரு பெரிய ஹாலினுள் நுழைகிறோம்.

"இந்த ஹாலை நானிருந்தபோது பாதியாகத் தடுத்திருந்தேன். தடுப்பாக அமைந்தது ஒரு புத்தக அலமாரியே. தடுப்புக்கு அந்தப் பக்கம் விருந்தினர்களின் படுக்கை அறை."

அடுத்துச் சமையலறையை ஒட்டினாற்போல இருக்கும் ஒரு சிறிய அறைக்குள் செல்கிறார் ஸ்ரீகாந்த்.

"இந்த அறையைச் சில காலம் நான் பூஜை அறையாக மாற்றியிருந்தேன். ஆனால் ஒரு கால கட்டத்தில் கீழ் போர்ஷன் முழுவதையுமே வாடகைக்கு எடுத்துக்கொண்டபொழுது வேறே அறை பூஜை அறையாக மாறியது. இன்று குடியிருக்கும் வீட்டின் சொந்தக்காரர்கள் பூஜை அறையாக வைத்திருப்பதைத்தான் நான் அன்று பூஜை அறையாக வைத்திருந்தேன்."

ராகவேந்திர ஸ்வாமிகள் என்றால் ஸ்ரீகாந்திற்குப் பக்தி அதிகம். பூஜை அறையில் ஸ்வாமிகள் படத்துக்கு முன் நின்று கண்ணை மூடித் தியானம் செய்ய ஆரம்பித்தார்.

சற்று நேரம் சென்று கண் திறந்ததும், "சமையலறையைப் பார்க்கலாமா? என் மனைவி உதவி கேட்கிறாளோ இல்லையோ உதவி என்ற பெயரில் என் மனைவிக்கு அதிக கஷ்டங்களை நான் கொடுத்தது இந்த அறையில்தான். எனக்கு ஓரளவுக்குச் சமைக்கத் தெரியும். அவகாசம் கிடைக்கும்போது ஒன்று படிப்பேன்; இல்லையேல் சமைக்கத் தான் விரும்புவேன்!

"ரொம்ப வருஷங்கள் இந்த வீட்டில் வசித்தேன். இங்கு வந்தபோது மேடை நாடகங்கள் பலவற்றில் நடித்துக்கொண்டிருந்தேன். இன்றைய டைரக்டர் கே. பாலசந்தர் அன்று ஏ. ஜி. எஸ். ஆபீஸில் உத்யோகஸ்தர். வேலை முடிந்த பிறகு அவர் தம் நீல நிற சைக்கிளில் (அதை இப்போது நாயர் ராமனுக்குக் கொடுத்து விட்டதாகக் கேள்வி) திருவல்லிக்கேணி

வருவார். நாடகநண்பர்கள் எல்லோரும் ஒன்று கூடி விவா திப்போம். இரவு மணி ஒன்பதானால் எல்லோரும் வீட்டுக் குத் திரும்புவோம்.

''ஒரு நாள் 'மேஜர் சந்திரகாந்த்' நாடகத்தில் நடித்து விட்டு எப்பொழுதும் போல் திருவல்லிக்கேணி சென்றேம். அங்கு தொலைபேசி என்னை அழைத்தது. வீட்டிலிருந்து பேசினார்கள். அவர்கள் அளித்த செய்தி என் மாமியார் காலமாகி விட்டார் என்பது தான். அவர் தனியார் மருத் துவ மனையில் சிகிச்சை பெற்று வந்தார். உடனே வீட்டுக்கு விரைந்தேன்.

''என் முதல் பெண்ணுக்கு அவ்வப்பொழுது ஃபிட்ஸ் வரும். நான் வீட்டுக்கு வரவும் என் மகள் என் மனைவியின் மடியிலேயே மடிந்து கிடக்கவும் எனக்கு என்ன செய்வ தென்றே புரியவில்லை.

''ஒரு புறத்தில் மாமியார், மற்றொரு புறத்தில் மகள். என்னைவிட என் மனைவியை நினைத்தால்தான் இன்றுகூட எனக்குச் கண்ணில் ஜலம் வந்துவிடும். தன்னைப் பெற்ற தாயையும், தான் பெற்ற மகளையும் ஒரே நாளில் அடுத் தடுத்து, ஒரு மணி நேரத்துக்குக் குறைவான அவகாசத்தில் இழந்தாள் அவள். யாரை யார் தேற்றுவது என்றே புரிய வில்லை. ஒருசிலர், 'நீங்கள் இருப்பது ராசியில்லாத வீடு. அதனால் வீட்டைக் காலி செய்யுங்கள்' என்றார்கள்.

'நான் வந்து இரண்டு வருஷங்களுக்குப்பிறகுதான் இது நடந்திருக்கிறது. 'வீட்டைக் குற்றம் சொல்லி என்ன பயன்? ஏன் மொட்டைத் தலைக்கும் முழங்காலுக்கும் முடிச்சுப் போடுகிறார்கள்?' என்று எண்ணினேன்.

''நான் இப்போது வந்திருக்கும் புதிய வீட்டைப் பற்றி யும்தான் இதே போல் குற்றம் சாட்டுகிறார்கள். 'அங்கு போன பிறகு தான் உங்களுக்கு மார்க்கெட் சரியாக இல்லை' என்கிறார்கள். ஆனால் புதிய வீட்டில்தான் சிறந்த நடிகருக் கான தமிழக அரசின் பரிசு எனக்குக் கிடைத்தது. அதனால் வீட்டில் ஏதும் இல்லை. எல்லாமே மனம் என்ற வீட்டில்தான் இருக்கிறது.

''நான் முன்பு வசித்த இதே வீட்டில் என் நெருங்கிய நண்பரும், என் நடிப்பில் மிகவும் அக்கறை உள்ள வருமான இயக்குனர் பாலசந்தரும் வசித்திருக்கிறார். நான் வாழ்ந்த அதே போர்ஷனில்தான் அவரும் வாழ்ந்தார். இந்த ஒரு காரணத்துக்காகவே நான் இந்த வீட்டை மிகவும் நேசிக்கிறேன், மனத் திருப் தியோடு வாழ்கிறேன்'' என்றார் ஸ்ரீகாந்த்.

பேட்டி : சலன்
புகைப்படம்: ஏ.வி. பாஸ்கர்

※ ''இந்த நாலு சுவர்களுக் கிடையில் நான் ராஜா! படிப்பது பிடித்தமான பொழுதுபோக்கு.''



■ ''மனைவிக்கு உதவுகிறேன் என்ற பெயரில் அதிக கஷ்டங்களை நான் அவளுக்கு அளித்தது இந்தச் சமையலறையில்தான்!''



நடந்து வந்த பாதை



# ஒரு வீடு பூட்டிக்கிடக்கிறது

**ராஜேஷ் குமார்**

**இ**ரவுவின் பூனிட்டுகளைப் பிரசவித்துக் கொண்டிருந்த கோவை நகரின் வால் பகுதிக்கு ரத்தினம் வந்தபோது இரவு மணிபத்து.

அமாவாசை கழிந்த ஐந்தாவது நாள் அது. கிரணிப் படிக் கிற்றாய்— பிறைச் சந்திரன் மேற்குத் திசையில் சிறிது நேரம் சோம்பலாய்ப் பிரகாசித்து விட்டு எப்போதோ அடங்கி விட்டிருந்தான். கரி மூட்டைகளை அடுக்கின மாதிரி அந்தப் பிராந்தியம் முழுவதும் இருட்டு உட்கார்ந்திருந்தது.

ரத்தினம் இடுக்கிட்டுப் பழக்கப்பட்ட தன் கண்களை நாலா பக்கமும் சுழற்றினன். சுழற்றியபடியே நடந்தான்.

எந்த வீட்டைச் சொன்னன் ஜோஸ்?

தன் சட்டைப் பைக்குள் கையை விட்டான் ரத்தினம். ஜோஸ் எழுதிக் கொடுத்த காகிதத் துண்டை எடுத்தான். பாண்ட் பாக்கெட்டில் இருந்த பேறு டார்ச்சை எடுத்து அதனை உயிர்ப்பித்துக் காகிதத் துண்டின் மேல் வெளிச்சத்தைக் கக்கச் செய்தான்.

25-ஏ, நேதாஜி ரோடு.

முன்னல் கொய்யா மரம் இருக்கும்.

பச்சைப் பெயிண்ட் அடிச்ச காம்பவுண்ட் கேட்.

நாய் இல்லே.

ஜோஸ் என்னவோ விவரமாகத்தான் எழுதிக் கொடுத்திருந்தான். ஆனலும் இந்த அட்டைக் கரி இருட்டில் திசைக்கொன்ருய் நிற்கும் ஒரே மாதிரியான் வீடுகளில் அந்தக் குறிப்பிட்ட வீட்டைக் கண்டு பிடிக்க ரத்தினம் திணறினன். 'நேதாஜி ரோடு எது?' என்று யாரையாவது கேட்கலாமென்ருல் வீதியில் ஒரு மனித ஜீவனைக்கூடக் காணோம்...

நேரமாக ஆக ரத்தினத்துக்குக் கோபமாய் வந்தது.

**ச**ரியாய் இரண்டு மணி நேரத்துக்கு முன்பு....

கலக்கல் கந்தப்பனின் சாராயக் கடையில் ஒருகையில்பன்னீராய்த் ததும்பி வழியும் சாராய டம்ளரோடும் மறு கையில் காரமான கருவாட்டுத் துண்டோடும் சொர்க்கத்தில் மிதக்கத் தயாராகிக் கொண்டிருந்த ரத்தினத்தை ஜோஸ் வந்து அழைத்தான்.

''ரத்தினம் கொஞ்சம் வெளியே வா... உன்கிட்ட ஒரு முக்கியமானவிஷயம் சொல்லணும்....''

''என்ன ஜோஸ்....? என்ன விஷயம்?''

ஜோஸ் கேட்டான்: ''சாயிபாபா காலனி கவுண்டம்பாளையம் பக்கம் நீ என்னிக்காவது போயி உன்னோட தொழிலைக் காட்டியிருக்கியா ரத்தினம்?''

''இல்லே...'' — தலையை ஆட்டினன் ரத்தினம்.

''ரத்தினம்... ஒரு வீடு.... இன்னிக்குக் காத்தாலே பத்து மணியிலிருந்து பூட்டிக்கிடக்குது. நாளைக் காலே வரைக்கும் பூட்டிக் கிடக்கும். இன்னிக்கு ராத்திரி நீ அந்த வீட்டுக்குள்ளாறப் பூந்தா பெரிய தேட்டையே போடலாம்!''

மோவாயைத் தேய்த்தான் ரத்தினம். ''அது யாரோட வீடு?''

''ஒரு ஜின்னிங் பேக்டரி முதலாளியோட வீடு. பேரு ஜோதி தயாள்.''

ரத்தினம் கேட்டான்: ''நாளைக் காலைல வரைக்கும் வீடு பூட்டியிருக்கும்னு என்ன நிச்சயம்? திடீர்னு பாதி ராத்திரியில வந்துட்டாங்கன்னு?''

''நிச்சயமா அவர் வரமாட்டார். இவ்வளவு உறுதியா நா சொல்றதுக்குக் காரணம் இருக்கு. அந்த ஜோதி தயாள் இன்னிக்குக் காலேல கார்ல மெட்ராஸ் புறப்பட்டுப் போனப்ப நான் பக்கத்திலிருந்த பெட்டிக் கடைல பீடி வாங்கிட்டிருந்தேன். அப்பத்தான் அவர் கார்ல புறப்பட்டுட்டிருந்தார். எதிர்ல வந்த அவரோட நண்பர் ஒருத்தர் ''எங்க போறீங்க ஜோதி தயாள்''ன்னு கேட்டார். உடனே அவர் மெட்ராஸுக்கு ஒரு அவசர விஷயமாப் போறதாகவும் நாளைக்குக் காலேதான் திரும்பி வர முடியுமுன்னு சொல்லிட்டிருந்தார்....''

''அவுங்க வீட்ல வேற யாரும் இல்லியா?''

''இல்லியாம்! நான் அந்தப் பெட்டிக் கடைக்காரனை அரசல் புரசலா விசாரிச்சேன். இருந்த பொண்டாட்டி மூணு மாசத்துக்கு முன்னுடிதான் மண்டையைப் போட்டாளாம்...''

''வேலைக்காரங்க?'' — ரத்தினம் இழுத்தான்.

''இல்லியாம். ஒரு நாய்க்குட்டி கூடக் கிடையாதாம்!''

வீடு பூட்டித்தான் இருக்கிறது என்ற தைரியத்தில் பூட்டை உடைத்துக்கொண்டு சென்ற வருஷம் சரவணப்பட்டி காலனியில் அந்த வீட்டுக்குள் நுழைந்தபோது பின் கட்டில் தூங்காமல் விழித்துக் கொண்டிருந்த வேலைக்காரச் சிறுமி ரத்தினத்தின் கண்களில் பட — அவள் வாயைத் திறந்து கத்தும் முன்பே கழுகாய் அவள் மீது பாய்ந்து வாயைப் பொத்திக் கழுத்தை இறுக்கிப் பிடிக்க அந்த மொட்டு சட்டென்று மூச்சுத் திணறித் தலையைத் தொங்கப்போட்டது ரத்தினத்தின் நினைவைத் தாக்கியது. நல்லவேளை போலீஸ் அந்த வேலைக்காரச் சிறுமி கொலை வழக்கில்



அதா.

பிள்ளையின் தாயார்: பெண்ணுக்கு ஏன் குமிட்டி அடுப்பு வாங்கித் தர்றீங்க, ஸ்டவில் சமைக்கப் பழக்கமில்லையா?

பெண்ணின் தாயார்: வரதட்சணைப் பாக்கியைக் கொடுத்திட்டுப் பிறகு ஸ்டவ் வாங்கித் தர்றேம். இல்லையானால் சனியன் பிடிச்ச ஸ்டவ் வெடிக்கத் தொடங்கும்!

- கே. ஆர். எம்.

துப்புத் துலக்க முயன்று முடியாமல் திணறிக் கையை விரித்து விட்டது....

''என்ன ரத்தினம்? உன்னால முடியலேன்னு சொல்லிடு... நான் நம்ம ஜோஸ்து பங்காரு திட்டப் போறேன்...''

''இரு ஜோஸ்... நான் போறேன். ஆனா நீ விஷயத்தை யார் கிட்டேயும் சொல்லிடாதே. விஷயம் வெளியே பரவினா ஆபத்து. எனக்கு முன்னுடி எவனாவது உள்ளார உட்கார்ந்திட்டிருப்பான்.''

''நீ போறதா இருந்தா நா எதுக்கோசரம் மத்தவங்க கிட்டச் சொல்றேன்?''

''அடையாள மெல்லாம் கரெக்டாச் சொல்லு'' — ரத்தினம் பரபரத்தான்.

ரத்தினத்தின் மனத்தில் நீருற்றுப் போல் தைரியம் ஊறியது.

வீட்டைப் பற்றின அடையாளங்களை ஜோஸ் ஒரு காகிதத் துண்டில் எழுதிக் கொடுக்க அதை வாங்கிச் சட்டைப் பையில் செருகிக் கொண்ட ரத்தினம் கவுண்டம் பாளையம் போகும் 4-ஏ பஸ்ஸைப் பிடித்தான்.

இந்த வீடுதான்!

ரத்தினத்தின் கையிலிருந்த காகிதத் துண்டு சத்தியம் செய்தது.

வீட்டின் முன்புறம் கொய்யா மரம் தெரிந்தது.

பச்சைப் பெயிண்ட் அடித்த காம்பௌண்ட் கேட் தெரிந்தது.

காம்பவுண்ட் சுவரில் பதிக்கப்பட்ட ஒரு அடி நீள 2 அங்குல அகலச் செவ்வகச் சலவைக் கல் துண்டில் அழகான எழுத்துக்களில் ஜோதி தயாள் தெரிந்தார். வீட்டுக் கதவில் பெரிதாய்ப் பூட்டுத் தொங்கியது.

ரத்தினம் சுற்று முற்றும் பார்த்தான்.

தெருவில் யாரும் இல்லை.

குபீரென்று காம்பௌண்ட் சுவர் மேல் தாவி ஏறி வீட்டின் உள் பக்கமாய் ஒரு பூனையின் லாகவத்தோடு குதித்தான். காய்ந்து போன கொய்யா மர இலைகள் அவன் காலடி பட்டு ரகசியம் பேசின. நடந்தான் ரத்தினம்.

நிதானித்து நடந்தான்.

பூட்டுத் தொங்கிய கதவருகே வந்து மண்டியிட்டு அமர்ந்தான்.

சாவிக் கொத்தில் இருந்த ஒரு சாவியை உருவிப் பூட்டின் வாய்க்குள் திணித்து நெம்ப அது 'க்ளிக்'கென்று சப்தித்துக் கொண்டே கற்பிழந்தது. பூட்டைக் கதவிலேயே விட்டு விட்டு மெதுவாய் எழுந்து கதவைத் தள்ளினான்.

அது திறந்து கொண்டது.

பேனா டார்ச்சைத் தட்டினான் ரத்தினம்.

ரப்பர் பந்தை விசிறிப்போல் வெளிச்ச வட்டம் சுவரில் விழுந்தது. ஒவ்வொரு அறையாய்ப் புகுந்து புறப்பட்டான். மூன்றுவதாய் இருந்த அந்தச் சிறிய அறைக்கு வந்தபோது—

ஜோதி தயாள் 'வணக்கம்' சொல்லி வர வேற்றார் — போட்டோவில். பக்கத்திலேயே காலமான அவருடைய மனைவி போட்டோ. ஜிகினா மாலை அஞ்சலி செலுத்துவதற்கு அறிகுறியாய் ஊசலாடிக் கொண்டிருந்தது. அதற்குக் கீழே....

ஆளுயர காட்ரெஜ் பீரோ 'நான் இங்கே நான் இருக்கிறேன்' என்றது.

ஆவலாய் அதை நெருங்கினான் ரத்தினம்.

இரண்டே நிமிடங்களில் பீரோ தன்னைத் திறந்து காட்டியது.

'சே! வெறும் பீரோ!' ரத்தினம் முனகிக் கொண்டான். 'எல்லாம் பாங்க் லாக்கரிலா? இதே அறையில் வேற ஏதாச்சும் பீரோ இருக்குமோ?' — மனத்தில் அந்தச் சந்தேகம் உருவாக ரத்தினம் டார்ச் ஒளியைப் பரபரப்பாய் விரட்டினான். அது ஓடியது.

வெளிச்சப் பந்து எம்பி எம்பி அறையை அலம்ப ஆரம்பித்தது.

ஆரம்பித்து — முடிவில் — அறையைப் பிரித்த— அந்த ஜன்னல் கம்பிகளின் மேல் பட்டபோது —

ரத்தினம் அதிர்ந்தான். மயிர்க் கால்கள் ஜில்லென்று நிமிர்ந்தன.

ஜன்னல் கம்பிகளுக்கு அந்தப் பக்கத்தில் நின்றுகொண்டு — ரத்தினத்தையே வெறித்துப் பார்த்துக் கொண்டிருந்த அந்தப் பெண்ணின் முகம் தெரிந்தது. அழகான பெண்ணின் முகம். தலைமயிர் கலைந்திருக்க— முகத்தில் எவ்வித உணர்ச்சியும் காட்டாமல் நின்றிருந்தாள். கையை அசைத்து ரத்தினத்தைக் கூப்பிட்டாள். குரல் என்னமோ போல் கரகரத்தது.

ரத்தினத்தின் தொண்டையும் நாக்கும் உப்புக் காகிதமாய் வறண்டது.

மெல்ல அவளை நோக்கி நகர்ந்தான், எட்டத்தில் நின்று கொண்டான்.

''நீ யாரு?'' — அவள் கேட்டாள்.

ரத்தினம் பதில் சொல்லாமல் அவளையே பார்த்தான்.

''எனக்குத் தெரியும்... நீ யார்னு?''— பற்கள் பளிச்சென்று தெரிய அவள் சிரித்தாள். கூடவே இரும்புச் சங்கிலிகள் ஒன்றோடு ஒன்று உராயும் ஓசை.

ரத்தினம் பேசாமல் நின்றான்.

''நீ யார்னு நான் சொல்லட்டா? நீ ஒரு ஆம்பிளை! எப்படிக் கண்டு பிடிச்சேன் தெரியுமா? உனக்குத்தான் மீசை இருக்கே!''

ரத்தினம் சட்டென்று நிலைமையைப் புரிந்து கொண்டான்.

'இவள்.... இவள் ... ஒரு பைத்தியம்! பைத்தியமான இந்தப் பெண்ணைச் சங்கிலியால் கட்டிப் போட்டுவிட்டு அந்த ஜோதி தயாள் மெட்ராஸ் போயிருக்கார்...'

ரத்தினத்துக்குத் துணிவு வந்தது.

''உம் பேரென்ன?''

''எங்கம்மாவைத்தான் கேக்கணும்...''

---

**அவன்:** ''நம்ம மானேஜர் ஆபீஸுக்கு வராத நாட்களில் நான் ஆபீஸில் தூங்கறதேயில்லே!''

**இவன்:** ''ஏண்டா?''

**அவன்:** ''அவர் இருக்கும் போதே தூங்கறதில்தான் த்ரில் இருக்கு!''

-உ. ராஜாஜி



''உங்கப்பா எங்கே?''

''அப்பா காரை எடுத்துக்கிட்டு 'புர்'னு ஓட்டிக்கிட்டுப் போயிட்டார்... போறப்ப எனக்கு ஆப்பிள், பிஸ்கெட், கேக், ரொட்டி குடுத்துட்டுப் போயிருக்கார்..... பூராத்தையும் தின்னுட்டேன்...'' சொல்லிவிட்டு ஈறுகள் தெரியச் சிரித்தாள்.

ரத்தினம் அவளை அளந்தான்.

அவள் கழுத்தில் தொங்கிய அந்தக் கனமான தங்கச் சங்கிலி அவன் உள்ளங் கையை அரிக்க வைத்தது. குறைந்தது பத்துப் பவுனாவது தேறும். கையிலிருந்த வளையல்கள் பத்துப் பவுன் தேறும். இது போதும் இன்னைக்கு...! —அவன் ஒரு முடிவுக்கு வந்தான்.

''கழுத்தில போட்டிருக்கியே அந்தச் சங்கிலி உன்னோடதா?''

''ஊஹூம்... எங்க அம்மாவோடது!''

''எனக்குத் தர்றியா?''

''அய்யே... ஆசை... ஆசை! தோசை... தோசை!'' — அவள் குதித்து ஓடக் காலில் கட்டப்பட்டிருந்த சங்கிலிகள் பயங்கரமாய் அதிர்ந்தன.

''சரி, சங்கிலி வேண்டாம். வளையலாச்சும் தர்றியா?'' —

அவள் யோசிப்பது போல் நின்றாள். பிறகு சிரித்தாள்.

''சரி... தர்றேன்! நீயே எடுத்துக்கோ...''

அவள் தன் இரண்டு கைகளையும் ஜன்னல் கம்பிகளுக்கிடையில் வேகமாய் நீட்டினாள்.

கைகளைப் பார்த்தான் ரத்தினம்.—நீண்டு வளர்ந்த நகங்களோடு கூடிய கைகள்.

கைகளில் வளையல்கள் சரிந்தன.

ரத்தினம் ஜன்னலை நெருங்கினான். அவள் கைகளை நீட்டிக் கொண்டு அப்படியே நின்றாள். முகத்தில் சிரிப்புமறைந்துவிட்டிருந்தது.

ரத்தினம் கைகளை நெருங்கினான்.

இன்னமும் நெருங்கி அவைகளைப் பற்ற முயன்ற அதே விநாடி....

குபீரென்று அவளுடைய கரங்கள் சீறி—

ரத்தினத்தின் முகத்தில் அசுரத்தனமாய்ப் பதிந்தது.

'ஹாக்...!' — ரத்தினம் திமிறினன். முடியவில்லே.

பெண்ணின் கரங்களுக்கு இத்தனைவலிவா?

அவளுடைய கை நகங்கள் ரத்தினத்தின் கழுத்துப் பரப்பில் ரத்தக் குழிகளைத் தோண்ட — வலது கரம் தொண்டைப் பகுதியைக் குதற—

ரத்தினம் அவள் இரும்புப் பிடியினின்றும் மீள முயன்று—

முடியாமல் பருந்தின் வாயில் அகப்பட்ட கோழிக் குஞ்சாய்—

கொஞ்சம் கொஞ்சமாய் உயிரை விட்டுக் கொண்டிருந்தான்.

அதே நேரம்—

சென்னையில் ஜோதி தயாள், மனநோய் நல நிபுணர் டாக்டர் ராகவேந்தரிடம் கதறிக் கொண்டிருந்தார்.

''காமினிக்கு ரொம்பவும் அதிகமாயிடுச்சு டாக்டர்! திடீர்னு அவ அம்மா இறந்த அதிர்ச்சி அவளுடைய மூளையைத் தாக்கியிருக்கு. நாளாவட்டத்தில் சரியாய்ப் போயிடும் என்று சொன்னீங்க டாக்டர்! ஆனு இப்ப அதிகமாயிடுச்சு டாக்டர்.. பக்கத்தில போனு கழுத்தையே நெரிக்க வர்ரு... ஆம்பளேகளே யெல்லாம் கொல்லப் போறேன்னு கத்தரு! காலேலருந்து உங்க கூடப் பேசறதுக்காக போன்ல ட்ரை பண்ணினேன். ஆனு லேன் க்ளியரா இல்லேன்னு சொல்லிட்டாங்க. மெட்ராஸ் வர பிளேன்லே டிக்கெட்டுக்கு முயற்சி செஞ்சேன். கிடைக்கல்ல. வேற வழியில்லாமக் கார்லேயே புறப்பட்டு வந்துட்டேன். காமினியை வீட்டில வச்சுப் பூட்டிட்டு வந்திருக்கேன் டாக்டர்... ப்ளீஸ் டாக்டர் புறப்படுங்க... விடியறதுக்குள்ளாற ஊர் போய்ச் சேரணும்!....''

---

## நடிப்பிலே ஊனமில்லே —விடை

### 1. மேஜர் சந்திரகாந்த்

மேஜர் சுந்தரராஜன் 'மேஜரான' படம். கண் பார்வை இல்லாதவராக மேஜர் இதில் நடிக்கவில்லே. வாழ்ந்து காட்டிவிட்டார். தன் வீட்டிலேயே தன் மகனைக் கொன்ற கொலேகாரனிடம், அவன் செய்கைகளைச் சொல்வது சிலிர்க்க வைக்கும்.

### 2. காக்கும் கரங்கள்

கால் ஊனமுள்ள ராதா என்ற பாத்திரத்தில் நடிக்கிருர் ரேவதி. பிரபல டாக்டரின் (எஸ். எஸ். ராஜேந்திரன்) தங்கை. டாக்டருக்கு மனைவியை விட தங்கை மேல் பாசம் அதிகம். இந்தப் பாசப் போராட்டம் படத்தின் வெற்றிக்குக் கைகொடுத்தது.

### 3. ராமு

ராமுவாக நடிப்பது மாஸ்டர் ராஜ்குமார். தனது அன்னையின் மரணத்தைப் பார்த்த தால் பேசும் சக்தியை இழக்கிறன் ராமு. டாக்டர்களின் முயற்சி தோல்வி அடைகிறது. தனது சின்னம்மா (தந்தையின் இரண்டாவது மனைவி) தீயில் கருகி இறப்பதைப் பார்த்து 'அம்மா' என்று அலறுகிறன். அந்த அதிர்ச்சி அவனைப் பேச வைக்கிறது.

### 4. பூஜா கே பூல் (இந்தி)

ராஜ் (தர்மேந்திரா) பெரிய பணக்காரரின் ஒரே மகனைக் காதலிக்கிறன். திடீரென்று அண்ணன் (அசோக்குமார்) இறக்க, அவரது மகளின் திருமணப் பிரச்னை இவன் தலையில் விழுகிறது. இந்த நிலேயில் கௌரி என்ற பார்வையில்லாத பெண்ணைத் திருமணம் செய்து கொள்கிறன்... பார்வை இழந்தவளாக நிம்மி ரொம்ப உருக்கமாக நடித்திருக்கிருர்.

### 5. களத்தூர் கண்ணம்மா

ஒரு கால் ஊனமுற்ற தன் நண்பனைக் கீழே தள்ளிய குற்றத்துக்காக முரட்டுப் பையனைக் கமல் அடிக்கிறன். முதல் படத்திலே ஊனமுற்ற நண்பனுக்கு வாதாடி, நூருவது படத்தில் தானே பார்வையில்லா தவராக நடிக்கிருர் கமல்.

### 6. பராசக்தி

நடிகர் திலகத்தின் முதல் படத்தில், அவரது தம்பியாக கால் ஊனமுற்றவஞக நடிக்கிருர் எஸ். எஸ். ராஜேந்திரன்.

### 7. அன்னேயும் பிதாவும்

லட்சுமியின் நடிப்பு எந்தப் படத்தில்தான் சோபிக்கவில்லே? இதில் ஊனமுற்ற சகோதரி பாத்திரம். உணர்ச்சியைக் கொட்டி நடிக்கிருர். ஏவி. எம். ராஜன் சகோதரன்.

### 8. அன்னே

பானுமதி, சௌகார் ஜானகி, எஸ்.வி. ரங்கா ராவ், டி. எஸ். முத்தையா, சச்சு முதலியோர் நடித்தது. டி. எஸ். முத்தையா படத்தில் கால்களே இழந்தவராக நடிக்கிருர். நடிப்பில் ஊனமில்லே.

### 9. பட்டர்ஃபிளைஸ் ஆர் ஃப்ரீ (ஆங்கிலம்)

தன் சொந்தக்காலிலே நிற்க வேண்டும், தனியாகச் செயல்பட வேண்டும் என்று நினேக்கும் டான் பேகர் என்ற பார்வையற்ற இளேஞன் நியூயார்க்கை விட்டு கிரீன்விச் கிராமத்துக்குச் செல்கிறன். அங்கு விவாகரத்து செய்யப்பட்ட ஜில் என்பவளைச் சந்திக்கிறன். காதல் வந்திருச்சி. குடும்பம் நடத்தும் இவர்கள், சந்திக்கும் பிரச்னைகளைக் கொண்டதுதான் கதை. தொகுப்பு: ''சிக்கி''

# குமரி அனந்தனின்



# குமுறல்

குமரி அனந்தனின் தலைமையில் இயங்கும் காந்தி — காமராஜ் தேசிய காங்கிரஸ்(1) கள்ளுக் கடை வேண்டாம் (2) விலைவாசியை இறக்க வேண்டும் (3) உள்ளாட்சித் தேர்தல்களை விரைவில் நடத்த வேண்டும் (4) மணியாச்சி ரயில் நிலையத்துக்கு 'வாஞ்சி மணியாச்சி' எனப் பெயர் மாற்ற வேண்டும் (5) காசோலைகளைத் தமிழில் அச்சடிக்க வேண்டும் என்ற ஐந்து அம்சக் கோரிக்கைகளை முன் வைத்துப் போராட்டத்தில் இறங்குகிறது. இது பற்றிக் குமரி அனந்தனைப் பேட்டி கண்டபோது —

● இந்தக் கோரிக்கைகளுக்காக இப்போது போராட்டம் நடத்த வேண்டிய அவசியம் ஏன் ஏற்பட்டது?

இவை எங்களுடைய நீண்ட நாள் கோரிக்கைகள். கள்ளுக் கடையைத் திறக்கக் கூடாது என்ற எங்கள் கோரிக்கைக்கு நிச்சயம் காந்திய வாதிகளின் ஆதரவும் தாய்மார்களின் ஆதரவும் கிடைக்கும். விலைவாசி குறைய வேண்டும் என்பது நாம் எல்லோரும் விரும்பும் ஒன்று. வெறும் கோரிக்கையாக மட்டும் இதை வைக்காமல் இதற்கான வழிகளையும் அரசுக்குத் தெரியப்படுத்தி உள்ளோம். பெட்ரோல் டீசல் மீதுள்ள எக்ஸைஸ் வரியைக் குறைத்தாலே விலைவாசிகள் குறைந்துவிடும் என்பது எங்கள் கருத்து. உள்ளாட்சித் தேர்தல்கள் நடத்தப்படாமல் கிராமங்களில் அரசு இயந்திரம் ஸ்தம்பித்து நிற்கிறது. மணியாச்சி ரயில் நிலையத்துக்கு வீரன் வாஞ்சிநாதனின் பெயர் வைக்க வேண்டும் என்ற எங்கள் வேண்டுகோளுக்குத் தேசப் பற்றுள்ள அனைவரும் ஆதரவு தருவார்கள் என்று நம்புகிறேன். எங்களது ஐந்தாவது கோரிக்கையான வங்கி காசோலைகளை (செக்) தமிழில் அச்சிட வேண்டும் என்பது, கிராமங்களில் வங்கிகள் அதிகமாகி விட்டதன் காரணமாக அவசியமாகச் செய்ய வேண்டிய ஒன்று.

● மேற்கண்ட கோரிக்கைகளைக் கட்சி அளவிலேயே தீர்மானம் போட்டு அனுப்பியிருக்கலாமே; அல்லது சட்ட மன்றத்தில் உங்கள் உறுப்பினர்கள் உள்ளதால் அங்கே தீர்மானங்கள் கொண்டு வரலாமே?

எங்கள் மாவட்ட மாநாடுகளிலும், செயற்குழு, பொதுக் குழுவிலும் தீர்மானங்கள் போட்டு அனுப்பியுள்ளோம். மணியாச்சி ரயில் நிலையத்தின் பெயரை வாஞ்சி மணியாச்சி ரயில் நிலையம் என்று பெயர் மாற்ற வேண்டும் என்று மாநில அரசு 1978லேயே மத்திய அரசுக்குக் கடிதம் எழுதியது. மீண்டும் 1979ல் கடிதம் எழுதியது. மத்திய அரசு எந்த விதமான நடவடிக்கையும் எடுக்கவில்லை.

● தற்போது தமிழ் நாட்டில் பல பகுதிகளில் வறட்சி நிலவுகிறது. இந்தச் சூழ்நிலையில் உங்கள் கட்சி போராட்டம் நடத்துவது நியாயம்தானா?

வறட்சி நிலவுகிறது என்பதற்காகக் கள்ளுக் கடையைத் திறக்காமல் இருந்துவிடப் போகிறார்களா? எங்களைப் பொறுத்தவரை ஆறு சட்ட சபை உறுப்பினர்கள் இருக்கிறோம். ஐந்து பேர்தான் இந்தப் போராட்டத்தில் கலந்து கொள்ளப் போகிறோம். போராட்டத்துக்குத் தடை விதித்து நாங்கள் சிறைக்குச் செல்லும் நிலை ஏற்பட்டால்வெளியில் இருக்கும் ஒரு சட்ட சபை உறுப்பினர், வறட்சிப் பணிகளில் குறைபாடுகள் இருந்தால் அரசின் கவனத்துக்குக் கொண்டு செல்வார். இரண்டரை லட்சம் உறுப்பினர்கள் உள்ள எங்கள் கட்சியில் 2622 பேர் தான் இந்தப் போராட்டத்தில் கலந்து கொள்ள இருக்கிறார்கள். இரண்டாவது அணித் தலைவர்கள் இருக்கிறார்கள். அவர்கள் கட்சி விவகாரங்களையும் மக்களின் குறைகளை அரசின் கவனத்துக்குக் கொண்டு வரும் பணியையும் மேற்கொள்வர்.

● ஒரு மலிவான விளம்பரத்தைத் தேடிக் கொள்ளத்தான் நீங்கள் தார் சட்டி ஏந்தி இந்தப் போராட்டத்தில் இறங்குகிறீர்கள் என்கிறேன்!

இதை நான் ஆணித்தரமாக மறுக்கிறேன். சில சில்லறைப் பிரச்னைகளுக்காகப் போராடுபவன்தான் மலிவான அரசியல்வாதி. எங்களது கோரிக்கைகள் அனைத்தும் நியாயமானவை. செய்ய வேண்டியவை. இவ்வளவு நாள் பொறுத்துப் பொறுத்துப் பார்த்து விட்டுத்தான் இதில் ஈடுபட்டிருக்கிறோம். இந்தப் போராட்டத்தில் ஈடுபடுவதற்கு முன்பு போராட்டம் நடக்கும் ஊர்களில் உள்ள முக்கியமான தெருக்களை எங்கள் கட்சித் தொண்டர்கள் சுத்தம் செய்வார்கள். இது ஒரு சமுதாயப் பணி இல்லையா? தீபத்தை உயரப் பிடித்து நிறுத்தும்போது, அதன் ஒளிவிடும் சுடரையும், அதனால் கிடைக்கும் வெளிச்சத்தையும்தான் பார்க்க வேண்டுமே தவிர திரியைத் தாங்கி நிற்கும் கம்பைப் பார்க்கக் கூடாது. மணியாச்சி ரயில் நிலையத்தில் தார் சட்டி ஏந்தி வாஞ்சி மணியாச்சி என்று பெயர்ப் பலகையில் எழுதுவதைத் தேசத் தியாகிகளுக்குச் செய்யும் மரியாதையாக நினைக்கிறேன். மலிவான விளம்பரத்தைத் தேடிக் கொள்ள வேண்டிய நிலையில் நானும் என் கட்சியும் இல்லை.

பேட்டி: ப்ரியன்



[illegible]

தன் முகத்தை வாஷ் பேசினுக்கு மேல் தெரிந்த கண்ணாடியில் கவனித்தான் ஹர்ஷன்.

தலை பாரமாகக் கனத்தது. இரவு முழுவதும் சரியான தூக்கமின்றிப் படுக்கை மீது பலப்பல சிந்தித்தபடி புரண்டதன் விளைவு... முகம் உப்பி, கண்கள் சிவந்து.... ஒரே இரவில் சில ஆண்டுகளைத் தாண்டிவிட்ட முதிர்ச்சி தெரிந்தது.

கீழ் உதட்டை அழுத்திக் கடித்துக்கொண்டு தன் உருவத்தையே கோபத்துடன் வெறித்தான்.

திடீரென்று அவன் மூளையில் மறுபடியும் ஒரு நினைவு மின்னல் அடித்தது.

அவனது திருமணம்தான் வேடிக்கையாகி விட்டதே ஒழிய, அதற்கென வந்து குவிந்த பரிசுகள், வாழ்த்துக் கடிதங்கள் ஒன்றும் குறைச்சலாக இருக்கவில்லை.

அம்மாவுக்காகவும், அவனுக்காகவும், இரு பக்கங்களிலிருந்தும் குவிந்தன வாழ்த்துக்கள். பரிசுகள் — ஏராளமாகத் தானிருந்தன.

மணநாள் அன்றே கோபத்தில் வெளியூருக்குப் புறப்பட்டுப் போய்விட்டிருந்தான். திரும்பி வந்தவன் பார்வைக்காக அம்மா அவைகளை அவனது அறையில் ஒரு மேஜை மீது வைத்திருந்தாள்.

''பார்! உனக்கு எத்தனை பரிசுகளும், பாராட்டுக்களும்'' அம்மா அவைகளைக் காட்டித் தான் கல்யாணப் பெண்ணை மாற்றிய தவறை நியாயப்படுத்த முயல்கிறார்களா என்று அப்போது அவனுக்கு எரிச்சல் வந்தது உண்மை.

இரவு உறக்கம் வராதபோது ஒரு நாள் அந்த வாழ்த்துக் கடிதக் கட்டை அவிழ்த்து இந்த அழகான கல்யாணத்துக்குப் பாராட்டுத் தெரிவித்த பிரகஸ்பதிகளின் பெயரைத் தெரிந்து கொள்ள விழைந்தான் ஹர்ஷன்.

# மாலை... மயக்கம்...



அவர்களில் அசலாம்பிகை கலலூரித்தலைவி ராதிகாவின் வாழ்த்துச் செய்தியைப் படித்த நினைப்புத்தான் இப்போது சட்டென உதய மாகியது. உடனே சங்கிலித் தொடராக நினைவுகள் கோவையாக மனத்தில் மாலை யிட்டன.

ஜயந்தியைப் பெண் பார்க்கப் போன போது தயானந்த், தன் மகள், அசலாம் பிகை கல்லூரியில் படித்தவள் என்று பெருமையடித்துக் கொண்டது.

தாய் தந்தையில்லாது அநாதையாகிவிட்ட தம்பி மகளைத் தாமே வளர்த்து, அவளையும் அதே கல்லூரியில் படிப்புக் கொடுத்த தமது தாராளப் போக்கைத் தம்பட்டம் அடித்தது.

எல்லாமே நினைவில் சுழன்றது. அத்துடன் கூடவே ஒரு யோசனை உதயமாகியது. பர பரப்புடன் அலுவலகத்துக்குப் புறப்பட ஆயத்தமானான்.

தயக்கமாகத்தான் இருந்தது. எப்படிக் கேட்பது? அதுவும் இதுபோல...? ஆனால் ஆவல் அவனது வெட்கத்தை மீறியது.

அலுவலகத்திலிருந்து தொலைபேசி எண் களைச் சுழற்றினான்.

''ஆமாம்! அசலாம்பிகை கல்லூரித் தலைவி ராதிகாதான் பேசறேன்... நீங்க...?'' மறு முனையிலிருந்து ஒலித்த குரல் கண்டிப்புடன் பேசியதும் ஒரு கணம் அசந்துவிட்டான்.

''உங்க சிநேகிதி கஸ்தூரி அம்மாவின் மகன் ஹர்ஷன்... உங்ககிட்டப் பேசணும்.'' தடுமாறினான்.

''ஹர்ஷன்! உன் மனைவி மாதங்கிக்குக் கல் லூரியில் இடம் கேட்கவா? இனிமே அடுத்த வருஷம்தானே முடியும்?''

''இல்லே மேடம்! மாதங்கியைப் பத்திப் பேசணும்... வந்து...'' அவன் முடிக்கு முன் ராதிகா குறுக்கிட்டாள்.

''எங்க வீடு தெரியுமில்லையா? சாயங் காலமா வீட்டுப் பக்கமா வா... நிதானமா பேசலாம்...'' போனை வைத்துவிட்டாள்.

அன்று மாலை ஆபீசிலிருந்து வீடு திரும்பு முன் முதல் வேலையாக, ராதிகாவின் வீட்டை அலைந்து கண்டு பிடித்தான்.



தெரு ஓரத்திலேயே காரை நிறுத்திப் பூட்டி விட்டுக் கம்பிக் கதவின் மேல் பொருத்தியிருந்த அழைப்பு மணியை அழுத்தினான். அச்சத்தில் அவன் மனம் படபடத்தது.

ராதிகாவே வந்து கதவைத் திறந்தாள். ''வா! வா! இது தெரு வீடு. கம்பித் தடுப்புக்குள்ளே பாதுகாப்பாக இப்படி ஒரு சிறை!'' வேடிக்கையாகக் கூறியபடி அவனை வரவேற்றாள்.

''நீ சின்னவனா இருந்தப்ப பார்த்த நினைப்பு. அடையாளமே தெரியாம வளர்ந்திட்டே. கல்யாணத்தையும் திருத்தணியிலே வச்சுக்கொண்டே. போகட்டும். உன் மூக்குத்தான் கஸ்தூரி பிள்ளைன்னு சொல்லுதே!'' கம்பிக் கதவைத் தாளிட்டபடி அவனைப் பின்தொடர்ந்தாள்.

வெகு காலம் அடைத்து வைக்கப்பட்டது போன்ற மக்கல் வாசனையும், வெளிச்சக் குறைவுமான முன்னறை. தாத்தா காலத்து உயரமானதொரு நாற்காலி. அதில் அவனை அமரச் சொல்லி உபசரித்தாள். விளக்கைப் போட்டுவிட்டுத் தானும் எதிரே அமர்ந்தாள்.

''அம்மா! காப்பி டிபன் தயாரா?'' உட்கார்ந்தபடியே உரக்கக் கேட்டாள்.

ஒருசில விநாடிகளில் தட்டுக்களில் பக்கவடாவும், டம்ளரிலே காப்பியும் சுமந்தபடி சமையற்கார அம்மாள் தோன்றினாள். அவற்றை வைத்துவிட்டு அரை நொடியில் மாயமானாள்.

''இப்பச் சொல்லு ஹர்ஷன்! மாதங்கி பத்தி என்னவோ பேசணும்னியே...'' பக்கடாவைக் கொரித்தபடி உற்சாகமாக ஆரம்பித்தாள் ராதிகா.

ஹர்ஷன் வார்த்தைகளை பக்கவடாவோடு மென்று தின்றான். தேர்வு அதிகாரி முன் உட்கார்ந்திருப்பது போன்ற ஒரு பயத்திலே சரிவரப் பேசக்கூட வரவில்லை.

கல்யாணத்திலே பெண்ணை மாத்தியதால் கோபமடைந்தது முதல், மாதங்கியை அவன் ஒதுக்கியது — ஒரே வீட்டில் விரோதிகள் போல் வாழ்ந்தது, அம்மாவுக்கும் அவனுக்கும் அதனால் ஏற்பட்ட மனஸ்தாபம் வரை கூறி முடித்தவன், ''எனக்கே மனம் மாறும் போலக் கொஞ்சம் இடம் கொடுத்த சமயம் இந்தக் கடிதமும் வந்தது'' என்றான்.




பையில் தயாராக வைத்திருந்த மொட்டைக் கடிதத்தையும் எடுத்து அவளிடம் நீட்டினான்.

அதை வாங்கி வேகமாகப் படித்து முடித்த ராதிகா வெறுப்புடன் அதை அருகிலிருந்த மேஜை மீது விசிறிப் போட்டாள்.

''ஹர்ஷன்! நீ ரொம்பப் படித்தவன். ஒரு பெரியநிறுவனத்தில் பொறுப்பான பதவியில் உயர் அதிகாரியாக இருப்பவன். உன் கீழ் இருக்கிற அத்தனை பேரையும் கட்டிச் சமாளிக்கத் தெரிந்த புத்திசாலி. அப்படியெல்லாம் இருந்தும், இன்னும் விவேகமும், உலக அனுபவமும் ஏற்படாததுதான் ஆச்சரியமாக இருக்கு. கேவலம் ஒரு மொட்டைக் கடிதத்தை நம்பி....''

ஹர்ஷன் முகத்தில் அசடு தட்டியது.

''விஷயம் உண்மையாக இருந்தால் அந்த நண்பன் உனக்கு நேரிலேயே சொல்லி இருக்கலாமே. எதற்காகத் தன் பெயரை மறைச்சிட்டு மொட்டைக் கடிதமாக எழுதவேணும்? உண்மையானதன்பெயரைச் சொல்லப் பயம், தயக்கம்,கோழைத்தனம். அதனால் கையெழுத்துப் போடவில்லே. அப்படியிருக்க, கடிதத்தில் கண்ட விஷயம் மட்டும் உண்மைன்னு எப்படி நம்ப முடியும்? சிந்தித்துப் பார்! உன் நிர்வாகத்திலே, உன் கீழ் வேலை செய்யும் ஒருவர் மேல் இப்படி ஒரு அபத்தமான கடிதம் வந்தால் நீ என்ன நடவடிக்கை எடுப்பாய்?''

ஹர்ஷன் மௌனம் சாதித்தான்.

''அவனை வேலையிலிருந்துநீக்கிவிடுவாயா?''

அவன் முகம் சிவந்து போனான்.

''போகட்டும். மாதங்கி இப்போ எப்படி இருக்கா?''என்று படபடவென்று கேட்டாள்.

''அவள் இப்ப எங்க கூட இல்லே.''

''என்னது?''

''ஆமாம்! இருக்கக் கூடாதுன்னு நான் கண்டிப்பா சொன்னதால அம்மா மனம் கசந்து போய் அவளை எங்கேயோ அனுப்பிட்டாங்க. அவ பெரியப்பா வீட்டிலேயும் இல்லேன்னு தெரியும்... எங்கேன்னு அம்மாகிட்ட நான் கேட்கலே.''

ராதிகாவின் முகம் கோபத்தால் பளபளத்தது. ''ஹர்ஷன்! உங்கம்மா ஸ்தானத்தில் நான் சொல்றேன். நீ ஒரு படித்த முட்டாள்! உனக்கு வாழ்க்கை கொடுத்த அதிசயமான சந்தர்ப்பத்தைச் சட்டென்று பிடித்துக் கொண்டு வாழத் தெரியாத மடையன் நீ. மாதங்கியை எனக்கு நன்றாகவே தெரியும். அவளைப் போல அடக்கமான, குணவதியான, புத்திசாலிப் பெண்ணை என் கல்லூரி வாழ்க்கையிலேயே நான் அதிகம் சந்தித்ததில்லே.

''எங்கள் கல்லூரிவிழாவிலே அவள் பிரார்த்தனை கீதம் பாடினால் அப்படியே மெய் மறந்து போவோம். அப்படி ஒரு குரல். அவள் வளர்ந்த வீட்டில் அன்போ, ஆதரவோ கிடையாதுன்னு எனக்கு ஓரளவு தெரியும். முறையான சங்கீதப் பயிற்சிக்கு வகையில்லே. ஆனால் கிடைத்த ஒரு துளி வாய்ப்பைப் பயன்படுத்திக் கொண்டு அதில் அமைதியாக வாழத் தெரிந்தவள் என்பதை அவளது சங்கீதப் பயிற்சி மூலம் தெரிந்து கொண்டேன். பொய் பேசத் தெரியாத, கபடற்ற பெண். பொறுப்புணர்ச்சி அதிகம் உள்ளவள். உதாரணத்துக்கு ஒன்று சொல்கிறேன்.

''ஒருமுறை கல்லூரி ஆண்டு விழா நடந்த சமயம். பாத்திரங்களைக் கணக்கெடுத்து ஒப்படைக்கும் பொறுப்பு மாதங்கியுடையது.

''ஒரு கண்ணாடி டம்ளர் கணக்கில் குறைந்தது. நான் கேட்பதற்கு முன்பே சொன்னாள்: 'மேடம்! கை தவறி உடைச்சிட்டேன். விலையைக் கட்டிடறேன். மன்னிச்சிடுங்க!'

''எனக்கு ஒரே வியப்பு! வேண்டுமானால், பழியை யார்மீதோ சுமத்தி யிருக்கலாமே. நானும் நம்பி யிருப்பேன். அவள் உண்மையை ஒப்புக்கொண்ட அந்த வெளிப் படையான பேச்சு என்னைக் கவர்ந்து விட்டது. அப்படிப்பட்ட பெண்ணை கஸ்தூரி மருமகளாக்கிக் கொண்டதில் என் தோழி ரொம்பக் கொடுத்து வைத்தவள் என்று நினைத்தேன். ஆனால் நீயோ.... அந்தக் குழந்தைக்கு எப்படிப்பட்ட கொடுமையை இழைச்சிருக்கே! நினைக்கவே என் நெஞ்சு கொதிக்கிறது.'' உக்கிரமாக அவனைப் பார்த்தாள் ராதிகா.

ஹர்ஷன் தலையைக் குனிந்தபடி, ''எனக்கு மாதங்கியைப் பற்றிய விவரம் தெரியாததால், முதலிலேயே யாரிடமும் கேட்காததனால்....'' என்று தடுமாறினான்.

''எனக்கு எரிச்சலை ஊட்டாதே ஹர்ஷன்! நீ என்ன செய்திருக்கணும்னு கேட்டா உண்மையை மாதங்கியிடமே கேட்டுத் தெரிந்து கொண்டிருக்க வேண்டும். அதை விட்டு, மூன்றாவது மனிதர் சொன்னதைக் கேட்ட நீ ஒரு முட்டாள்! மாதங்கியின் தோழிகளைக் கேட்டால், அவளைப் பற்றி ஆகா, ஓகோ என்று புகழ்வார்கள். அவளைப் பிடிக்காதவர்களைக் கேட்டால், ''அவளா...? அவள் ஒரு'' அப்பட்டமாகப் புனைந்து கூறுவார்கள். உண்மையை நீயே உணர முன்வந்திருக்க வேண்டும். மத்தவர்கள் சொல்லித் தெரிஞ்சு கொள்ள வேண்டிய விஷயம் இல்லே இது!'' சாட்டையடியாக அவன் மனத்தைச் சாடினாள்.

''மன்னிச்சுக்கோங்க, மேடம் நான் செய்த தவறுகளை எப்படித் திருத்திக் கொள்றதுன்னு முயல்கிறேன்.'' காப்பி, டிபனை முடித்து விட்டுத் தட்டுத்தடுமாறியபடி அந்தக் கடிதத்தைக் கவனமாகப் பையில் போட்டபடி வெளியேறினான்.

இரண்டு நாட்கள் சென்றும் அவன் மனம் சீராக இல்லாமல் கொதித்துக் கொண்டே இருந்தது. ராதிகா அவனை வார்த்தைகளால் சுட்டது முதல் முள் மேல் இருப்பவன் போல் தவிக்க ஆரம்பித்தான். இந்த மொட்டைக் கடிதத்துக்கு ஒரு தீர்வு காண வேண்டும்.

அன்று மாலை உட்லண்ட்ஸ் டிரைவ் இன்னில் ரமேஷை முன்கூட்டியே அழைத்திருந்தான். பையில் மொட்டைக் கடிதம் உறுத்த, மனத்தில் அதைவிடப் பெரும் உறுத்தலோடு அலுவலகத்திலிருந்து புறப்பட்டான்.

உட்லண்ட்ஸ் வாசலிலேயே ரமேஷ் அவனைச் சந்தித்துப் புன்னகைத்தான். தொங்கு மீசையும், ஒல்லியான உருவமுமாக அவனைப் பார்த்த ஹர்ஷனுக்கு உள்ளூற ஆத்திரம். ''இவனா இப்படி ஒரு வேலை செய்தான்?''

டிபன் காப்பி முடித்ததும் 'பில்' என்று ஹர்ஷன் உத்தரவிட்டான். பிறகு ரமேஷ் பக்கம் திரும்பி, ''மிஸ்டர் ரமேஷ்! இந்தக் கடிதம் நீங்க எழுதினதுதானே?'' என்றான் சட்டைப் பையிலிருந்து உருவிய கடிதத்தைப் பிரித்தபடி.

ரமேஷின் முகம் இருண்டது. ஏதோ பேச முயன்றான். ''பொய் சொல்ல வேணாம். அன்னிக்கு அழைப்பிதழில் நீங்க எழுதினீங்களே அதே எழுத்துத்தான் இதிலேயும் இருக்கு. எனக்கு உண்மை தெரியணும். இல்லே, இதைக் கையெழுத்து நிபுணர் வரை கொண்டு போய், போலீஸ் கேஸாக்கிற சாமர்த்தியம் எனக்குண்டு.''— மிரட்டினான்.

''தயவு செஞ்சு மிஸ்டர் ஹர்ஷன், என்னை....என்னை மன்னிச்சுடுங்க.''

''உம், சொல்லுங்க!''

''இது என் மாமியார் சொல்லிக் கொடுத்து என் மனைவி மூலமா என்னை எழுத வச்சது. அவங்களுக்கு மாதங்கி மேலே பொறாமை. ஒரு முறை மாதங்கியிடமே உங்களுக்கு ஒரு விபத்தில நடந்த கோளாறுல, தாம்பத்ய வாழ்க்கைக்குத் தகுதியில்லாம ஆக்கிட்டதா சொன்னாங்களாம். ஆனா அவள் அதை அசட்டை செய்திட்டா. அதனால...''

''இப்படி ஒரு குழப்பம் செய்யப் பார்த்தீங்க. இல்லையா மிஸ்டர் ரமேஷ்? அவங்க தான் சொன்னா, உங்க புத்தி எங்கே போச்சு? இதனால. எத்தனை விபரீதம் ஏற்படும்னு யோசிச்சுப் பார்த்தீங்களா? நீங்கல்லாம்...'' உறுமியபடி ரமேஷின் சட்டையைப் பிடிக்கப் போனான் ஹர்ஷன். ''ஸார், பில்!'' குரல் கேட்டுத் திடுக்கிட்டுத் திரும்பியவன் உறுமியபடியே முகத்தருகே பையன் பில்லை நீட்டவே அதன் மீது சட்டென்று பணத்தை எடுத்து வைத்தான். பையன் அப்பால் நகர்ந்ததும் ரமேஷை மீண்டும் உறுத்துப் பார்த்தான்.

''பிழைச்சுப் போ... இனி இப்படி ஏதாச்சும் உங்க மனுஷா செஞ்சா அத்தனை பேரும் போலீஸ் ஸ்டேஷனில் இருப்பீங்க. ஜாக்கிரதை!'' அடிக் குரலில் அதட்டிவிட்டுச் சில்லறைக்குக் காத்திராது சட்டென்று எழுந்து காரைக் கிளப்பிக் கொண்டு கன வேகமாகப் புறப்பட்டான். (தொடரும்)



''நான் காப்பி, டிபன், டீ எதுவும் சாப்பிடக் கூடாதாம்!''

''ஐயய்யோ! என்ன உடம்புன்னு டாக்டர் சொன்னாரா?''

''இல்லை... ஓட்டல் முதலாளிதான் சொன்னார்! என் கணக்கில் ஏகப்பட்ட பாக்கி இருக்காம்!''

—எஸ்.பானு





# மாருதி: மறுமலர்ச்சியா? மறுபடி பழங்கதையா?

சஞ்சய் காந்தி மறைவின் முதல் ஆண்டு நினைவு வரும் சமயத்தில் அவரது பெரும் கனவான மாருதி தொழிற்சாலை நனவாவதற்கு முயற்சிகள் நடைபெற்று வருகின்றன.

பொருள் நஷ்டத்தில் சிக்கி, கோர்ட்டு வியாஜ்ஜியங்களில் அகப்பட்டு, செயலிழந்து 'லிக்விடேட்' ஆகிக் கலைந்துவிட்ட கம்பெனியை மத்திய அரசு நஷ்ட ஈடு கொடுத்து வாங்கி, ''மாருதி உத்யோக் லிமிடெட்'' என்ற பெயரில் இயக்கும் முயற்சி மும்முரமாக இருக்கிறது.

டெல்கோ கம்பெனி சேர்மன் எஸ். முல்காவ்கர் இந்தப் புதிய நிறுவனத்தின் தலைவராக நியமிக்கப்பட்டிருக்கிறார். துணைத் தலைவராகவும் மானேஜிங் டைரக்டராகவும் பதவி ஏற்றிருப்பவர் திரு வி. கிருஷ்ணமூர்த்தி. கனரகத் தொழில் அமைச்சின் முன்னாள் செயலாளராகவும், அதற்கு முன் பாரத் ஹெவி எலெக்ட்ரிகல்ஸ் நிறுவனத்தின் தலைவராகவும் மானேஜிங் டைரக்டராகவும் இருந்தவர். அமைச்சகத்தின் செயலாளராக இருந்த போது பாரதத்தின் பெரிய பெரிய பொதுத் துறை நிறுவனங்கள் பலவற்றின் நிர்வாகத்தைக் கண்காணித்து வந்தவர். தொழில் நுட்பத்தில் வல்லவராகவும் நிர்வாக நிபுணராகவும் இருப்பவர்கள் மிகச் சிலரே. அத்தகைய 'டெக்னோக்ராட்' ஆன வி.கே. இந்தியத் தொழில் வளர்ச்சிக்குப் புரிந்துள்ள நலன்களைக் கருதி அவருக்கு 'பிஸினஸ் லீடர்ஷிப்' என்னும் விருதை வழங்கியிருக்கிறார்கள். (இத்தகைய விருது வாங்கிய பிறர் ஜே. ஆர். டி. டாடா, பரத்ராம், அரவிந்த் மபட்லால், கிர்லோஸ்கர் என்றால் போதும், இதன் பெருமையைப் புரிந்து கொள்ள.)

பார்லிமெண்டின் நிரந்தரக் கேள்விச் சரங்கமாகி விட்ட மாருதி விவகாரச் செய்தியின் நினைவு தயக்கமளிக்க, திரு கிருஷ்ணமூர்த்தி போன்றோரின் சாதனை அனுபவம் மிக்க தலைமை ஊக்கமளிக்க, என்ன நடக்கப் போகிறது? விசாரிக்கலாம்.

எந்தச் சங்கடமான கேள்விக்கும் ஏதாவது சமாதானமான பதில் வைத்திருக்கிறார் திரு வி. கே.

''கோர்ட்டிலே ஒப்படைக்கப்பட்ட.. சூட்டப் பட்ட ஒரு தொழிற்சாலையை அரசாங்கம் வாங்கியது மக்களுக்கு நஷ்டமல்லவா?''

''இல்லை. பொதுப் பணம் மிச்சமாகியிருக்கிறது. இப்போது அரசாங்கம் நாலரைக் கோடி—ரூபாய்தான் நஷ்ட ஈடாகக் கொடுத்திருக்கிறது. 15 கோடி மதிப்புள்ள இடம், சாதனம் எல்லாம் உள்ளன. இதற்கு ஒன்பது கோடிவரை தந்து, தாமே ஏற்று நடக்குவதற்காகத் தனி நபர்கள் முன்வந்தார்கள். வெற்றிகரமாக நடத்த முடியாதென்றால் வருவார்களா? சஞ்சய் காந்தியைப் பிடிக்காதவர்கள் இருக்கலாம். ஆனால் அவர் லட்சியம் சாதிக்கக் கூடிய ஒன்றுதான். சிலர் எப்போதும் எதற்கும் குறை கூறுவார்கள். உதாரணமாக இடம் பற்றி. இவ்வளவு பெரிய இடம் கிடைக்காவிடில் இந்தத் திட்டத்தை நிறைவேற்ற முடியுமா? டில்லிக்கு அருகே கிடைக்காமல், வேறு எங்கே கிடைத்திருந்தாலும் இந்த அளவு நிலப் பரப்பு தேவைதானே?''

''இத்தனை நாளிலே சாதிக்காததை இனி எப்படிச் சாதிக்க முடியும்?''

''இதுவரை சுயமாக வகுத்துக் கொண்ட பல நிர்ப்பந்தங்களால்தான் முன்னேற்றம் காண முடியவில்லை என்று சொல்லலாம். அன்னிய நாட்டுப் பொருள், கருவிகள் உதவி எதுவும் கூடவே கூடாது என்று பிடிவாதமாக இருந்தது பெரிய குறைபாடாகி விட்டது. அதோடு பெரிய அளவில் முதலீடு போட்டு மிகப் பெரிய அளவில் தயாரிப்பைத் தொடங்க வேண்டிய தொழில்



வி. கிருஷ்ணமூர்த்தி

இது. அப்போதுதான் கட்டுப்படியாகும். தயாரிப்பில் சிக்கனம் காண முடியும். மலிவு விலையில் வழங்க முடியும்.''

''இப்போது இந்தியாவில் உள்ள மோட்டார் தொழிற்சாலைகளுக்கும் மாருதி தொழிற்சாலைக்கும் எந்த விதத்தில் வித்தியாசம்?''

''நமது நாட்டிலே மோட்டார் தயாரிப்புத் தொழில் ஆரம்பித்து நாற்பது ஆண்டு ஆகிறதே தவிர அதில் வளர்ச்சியே இல்லை. லட்சக் கணக்கில் தயாரித்தால்தான் கட்டுப்படியாகும் என்ற உருப்படிகளைச் சில ஆயிரக் கணக்கிலேதான் அவர்கள் தயாரிக்கிறார்கள். அதற்கென வரவழைத்த தயாரிப்புக் கருவிகள் இன்னும் தமது செலவுக்கே ஈடு செய்யவில்லை. இதனால் தயாரிப்புச் செலவு அதிகம். புதிய சாதனம் வரவழைக்கும் அளவு பிஸினஸ் ஆகவில்லை. அப்படி வந்தாலும் தயாரிப்புச் செலவு ஏறத்தான் வேண்டும். சாதா தயாரிப்பே இப்படி யென்றால், புதிய பரிசோதனைகளை எப்படிச் செய்ய முடியும்? மாருதி உத்யோக் தொழிற்சாலை தொடங்கும்போதே நவீனமாகத் தொடங்கும். சிக்கனமாகப் பெட்ரோல் செலவாகும்படி என்ஜின் அமைக்கப்படும். மோட்டார் கார் என்பது ஆடம்பரப் பொருள் அல்ல, அவசியமான சாதனம் என்ற கருத்தில் 'பாடி' அமைக்கப்படும். வரிகள் குறைய வழி செய்தால் விலையைக் குறைக்க முடியும். வெளிநாட்டுக்கும் ஏற்றுமதி செய்ய முடியும்.''

''இன்று ஜப்பானியக் கார்களின் போட்டியை அமெரிக்காவே சமாளிக்க முடியவில்லை என்று செய்தி வருகிறது. இப்படி இருக்க இந்தியக் கார்களுக்கு ஏற்றுமதி வாய்ப்பு இருக்குமா?''

''எப்படிச் சொல்ல முடியும்? ஜப்பானியக் கார்கள் சொகுசான மேல் நாட்டுத் தேவைகளுக்கு ஏற்றபடி தயாரிக்கப்படுபவை. நமது வண்டிகள் நமது நாட்டுக்கும் நம்மைப் போன்ற பிற நாட்டவர்க்கும் ஏற்ற வடிவமைப்பில் வரும். அதோடு உலகத் தேவை எல்லாவற்றையுமா ஜப்பான் பூர்த்தி செய்து விட முடியும்?''

''அன்னியக் கம்பெனிகள் கூட்டுறவு இருக்கும் என்கிறீர்களே, அதில் ஜப்பான் கம்பெனி உண்டா?''

''இன்னும் முடிவாகவில்லை. ஜப்பான், ஜெர்மனி, பிரான்ஸ், இத்தாலி, இங்கிலாந்து நாடுகளிலிருந்து பத்து உலகப் புகழ் பெற்ற மோட்டார் தயாரிப்பாளர்களுடன் தொடர்பு கொண்டுள்ளோம். பேச்சு வார்த்தை நடக்கிறது. ஏதாவது ஒன்று அல்லது இரண்டு கம்பெனிகளுடன் ஒப்பந்தம் செய்துகொள்ள வாய்ப்பு இருக்கிறது என்று நேற்று பார்லிமெண்டில் மந்திரி திரு சரண்ஜித் சனுை கூறியிருக்கிறார்.''

''முதலீடு?''

''இது 1000 கோடி ரூபாய் முதலீட்டுத் தொழிற்சாலையாக இருக்கும். அரசாங்கம் படிப்படியாக ரூ. 500 கோடி வரை முதலீடு செய்ய வேண்டி வரும். வெளிநாடு நிறுவனங்களும் பணம் போடலாம். மூன்று ஆண்டுகளுக்குள் தயாரிப்பைத் தொடங்கி,



பையனின் அப்பா:- என்னுடைய பையனை இப்படிப் போட்டு அடிக்கிறீங்களே அவன் என்ன தப்புசெஞ்சான்!

ஆசிரியர்: எந்தக்கேள்வி கேட்டாலும் தெரியாது தெரியாதுன்னு சொல்றான்!

பையனின் அப்பா:- அப்படி என்ன கேள்வி கேட்டிங்க?

ஆசிரியர்:- அமாவாசை அன்னிக்கு நிலவு தெரியுமானு கேட்டேன்! -கடலூர் கன்னியப்பன்

---

ஆண்டு ஒன்றுக்கு இன்றைய மதிப்பில் 1200 கோடி ரூபாய் பெறுமானமுள்ள கார்களும் உபகரணங்களும் தயாரிக்கத் திட்டம்.''

''அவ்வளவுக்குத் தேவை இருக்குமா?''

''எதிர்காலத் தேவையை எஸ்டிமேட் போட முடியாது. கார் மட்டுமல்ல, நமது நாட்டுக்கும் நம்மைப் போன்ற நாடுகளுக்கும் 'லைட் கமர்ஷியல் வெகிகில்' என்னும் சிறிய சாமான் வண்டிகள் நிறையத் தேவை. அப்படிப்பட்ட வண்டிகள் செய்ய எங்களிடம் டிசைன் இருக்கிறது. அதுமட்டுமல்ல, எல்லா மாடல்களுக்கான கார் பகுதிகளை நிறையத் தயாரிப்போம். ஆயிரம் கார் விற்பதை விடச் சுலபமாகப் பத்தாயிரம் கார்ப்பரேட்டர்கள் விற்கலாம். ஒரு பெரிய ஆலை என்றால், அதை ஒட்டி உபகரணத் தயாரிப்புக்கள் செய்யும் சிறிய தொழிற்சாலைகளும் நிறைய எழும். இப்போது டி.வி.எஸ். குரூப் கம்பெனிகள் இருப்பது போல. ஆட்டோமொபைல் தொழில் வளர்ச்சியால் நாட்டின் பல தொழில்களும் விவசாயமும் பல வகையில் வளரும். நாட்டின் பொருளாதாரமே வளர வாய்ப்புண்டு. அதனால்தான் சொன்னேன், இனி கார் தொழிலைச் சொகுசு சாதனமாகப் பார்க்கக் கூடாது. கைக் கடிகாரமும் சைக்கிளும் போல அவசியமான வாழ்க்கைத் தேவை என்பேன். இதன் மீது வரி விதிப்புக் கொள்கையிலும் மாறுதல் தேவை என்பதை நிதி அமைச்சக உணரும் என நம்புகிறேன்.''



# பாரிஜாதம்

லாவண்யா பிக்சர்ஸ் தயாரித்த 'பாரிஜாதம்' இந்த வாரம் ஞாயிற்றுக் கிழமை (24–5–81) சென்னை டி. வி.யில் திரையிடப் படுகிறது. இதில் டி. ஆர். மகாலிங்கம், எம். வி. ராஜம்மா, பி. எஸ். சரோஜா, என். எஸ். கிருஷ்ணன், டி. ஏ. மதுரம் போன்ற பிரபல நட்சத்திரங்கள் நடிக்கின்றனர். முப்பது ஆண்டுகளுக்கு முற்பட்ட படம்.

பத்திரிகை விமர்சனங்களிலிருந்து சில வரிகள்:

**சுதேசமித்திரன்**

படம் எந்த இடத்திலும் சலிப்புததட்டாமல் வேகமாக ஓடுகிறது. இன்பமான பாட்டுக்கள். ஹாஸ்யம் நிறைந்தது. அவசியம் பாருங்கள்.

**தினமணி**

பிரசார ஹாஸ்யம் வெகு அழகாக கையாளப்பட்டுள்ளது. பின்னணிப் பாடல்கள் இனிமை. நல்ல டைரக்ஷன்.

இந்தப் படத்தில் மொத்தம் இருபத்தொரு பாடல்கள் இருக்கின்றன!

**கல்கி**

பாமா விஜயம், கிருஷ்ண துலாபாரம், நரகாசுர வதம் ஆகிய மூன்று புராணக்கதைகளையும் காலத்துக்கேற்ற முறையில் மாற்றி பாரிஜாதம் என்ற பெயரில் வெளியிட்டிருக்கின்றனர். பாடல்களும் சங்கீதமும் நன்றாக அமைந்து இதை ஓர் இசைப் படமாகவே செய்திருக்கின்றனர். படத்தின் ஆரம்பத்திலிருந்து என். எஸ். கிருஷ்ணனும் டி. ஏ. மதுரமும் தோன்றி, காலத்துக்கு ஏற்ற சிறந்த கருத்துக்களைப் பளிர் பளிர் என்று வெளியிட்டு ரசிகர்களைக் குதூகலப்படுத்துகின்றனர்.

தொகுப்பு: சிக்கி

''சமீபத்தில் பியட் கார் அதிபர் அக்னெல்லி இதாலியிலிருந்துவந்தபோது 'மாருதி திட்டத்தில் ஆர்வம் காட்டுவீர்களா?' என்று கேட்டதற்கு அதிருப்தியாகப் பேசினாரே.''

''அவர் சொன்னதைச் சரியாகப் பார்த்தால் புரியும். நமது கார் தயாரிப்பு எண்ணிக்கை சிக்கனமாக அமையவில்லை என்கிறார். அவர் ஆண்டுக்கு லட்சக் கணக்கில் கார் தயாரிக்கிறார். அந்தப் பார்வையில் இது சாதாரணமாகப் படுகிறது. கார்களின் எண்ணிக்கை அதிகமானால்தான் தயாரிப்புச் செலவும் விலையும் குறையும் என்பது பொதுவான கருத்து. என்றாலும் டிரக், லாரி போன்ற தயாரிப்புக்களில் குறைந்த எண்ணிக்கை தயாரிப்பில் கூட லாபகரமாக இயங்க முடியும்.''

''மாருதி செயல்பட்டால் இப்போதுள்ள பிற கார் தொழிற்சாலைகளும் அதன் தொழிலாளர்களும் பாதிக்கப்பட மாட்டார்களா?''

''இது போட்டியல்ல. இதுவரை உள்ள தொழிற்சாலைகளை விடப் பெரிய அளவில் செயல்படும் என்பதாலும் நவீன முறையில் இயங்கும் என்பதாலும் இந்த முயற்சியை இந்தியக் கார் தயாரிப்புத் தொழிலை முன்னேற்றும் ஒரு வாய்ப்பாகவே கொள்ள வேண்டும். ஏற்கனவே உள்ள தொழிற்சாலைகள் அவரவர் பொருள்களின் உற்பத்தியையும் தரத்தையும் உயர்த்த முயலலாம். நாட்டிலே இந்த ஆட்டோமோபைல் துறைக்குத் தேவையான நிபுணர்களையும், தொழில் நுட்ப ஊழியர்களையும் அதிகரிக்கப் பயிற்சி நிலையங்கள் வைப்போம். பிற நாட்டு மாணவருக்கும் பயிற்சி தருவோம். நம் நாட்டுக்கு ஏற்ற கார் டிசைன், பெட்ரோல் சிக்கனம், தயாரிப்பு மூலப் பொருள் ஆகிய பல துறைகளில் எத்தனையோ ஆராய்ச்சி செய்ய வேண்டியிருக்கிறது. அதையெல்லாம் நடத்துவோம். நல்ல வேளையாக டெல்கோ அதிபர் முல்காங்கர் போன்ற பழுத்த ஜாம்பவான்களின் அனுபவ ஆலோசனை கிடைத்திருக்கிறது. இந்த முதியவர் எழுபத்தைந்து வயதிலும் சிந்தனை ஆற்றலிலும் செயல் திறனிலும் எங்களுக்கு நல்ல உதாரணமாக விளங்குகிறார்.''

''கேட்க உற்சாகமாக இருக்கிறது. நடைமுறையில்....''

''அரசியல் குறுக்கீடு இல்லாவிட்டால் எவ்வளவோ சாதிக்கலாம். நான் பல பெரும் தொழில்களில் நேர்முகமாக ஈடுபட்டிருக்கிறேன். சிமெண்ட், எலெக்ட்ரிக் டர்பைன் போன்ற பல துறைகள். எனக்கென்னவோ ஆட்டோமோபைல் துறைதான் வேறு எத்தனையோ வகை வளர்ச்சிக்கு அடிப்படை என்று தோன்றுகிறது. இது விஷயமாக நிறையத் தெரிந்துகொள்ள முயல்கிறேன். ஒரு சவாலை ஏற்கும் ஆர்வத்துடன் இருக்கிறேன். அதனால்தான் வேறு சில வெளிநாட்டு உத்தியோகவாய்ப்புக்களைக்கூடவிட்டுவிட்டு இங்கே அழைத்ததும் வந்துவிட்டேன். முடிந்தவரை முயன்று பார்ப்போமே.''

நாமும் காத்திருந்து பார்ப்போம்.

பேட்டி: தம்பி சீனிவாசன்



● கல்கி விடுமுறை மலர் கண்டேன். சுஜாதா, கஸ்தூரிரங்கன் ஆகியோரின் டெல்லி—சென்னை விஜயம் தமாஷாக இருந்தது. கோவி மணிசேகரனின் 'கூடுதுறை' சிறுகதைக்குப் பாராட்டுக்கள். மற்ற கதை, கவிதைகள், துணுக்குகள், புகைப்படங்கள் எல்லாமே அருமை. எதைப் பாராட்டுவது, எதை விடுவது?

கோபி　　　இளஞ்சேரன்

● நளியா ஹஸன் தேன் குரலைப் போன்றே அட்டைப் படமும் அருமை. குர்பானி பாடகி என்பதைத் தவிர வேறெதுவும் அறியாத என்போன்றோர்க்கு ''சிக்கி''யின் கட்டுரை முழு விளக்கம் அளிப்பதாக விளங்கியது.

திருநெல்வேலி-1　　　கி. சதாசிவம்

''உதவாக்கரைக் கார்ப்பரேஷன்!'' தலையங்கம் படித்ததும், நாடாளு மன்றத்தில் உறுப்பினர் ஒருவர் 'Food Corporation of India அல்ல, Food Corruption of India' என்றது நினைவுக்கு வந்தது.

மேட்டுப்பாளையம்　　　எம்.பி. ரத்னகுமார்

● ம. பொ. சி. அவர்களின் எழுத்தில் பாரதியை நேருக்கு நேர் தரிசிக்க முடிகிறது. பாரதியின் பாடல்களைக் குறிப்பிட்டு அவர் தரும் விளக்கங்களில் மனமுருகி, நெகிழ்ந்து போகிறோம். சிலிர்க்க வைக்கும் பகுதி.

ஸ்ரீரங்கம்　　　ஆர். ஸ்ரீனிவாசன்

● ம. பொ. சி.யின் ''மனச்சாட்சி எழுப்பிய வினு'' படித்தேன். கி. பி. 1000ஆம் ஆண்டின் தொடக்கத்திலேயே அந்நியர் இந்தியாவில் படையெடுப்பின் மூலம் (கஜினி முகமது) புகத் தொடங்கி விட்டனர். அந்நியர் ஆட்சி தொடங்கப்பட்டது பாபர் காலத்தில் அல்ல. பாபர் 10ஆம் நூற்றாண்டில் வந்தார் என்று வேறு தவறாகக் கூறுகிறார். பாபர் இந்தியாவுக்கு முதலில் வந்தது கி. பி. 1526ல். பாரதியார் சரியாகத்தான்பாடியிருக்கிறார். அவர் காலத்தில் அந்நியர் ஆட்சி இந்தியாவில் தொடங்கி 921 ஆண்டுகள் ஆகி விட்டன. ஓசை அழகுக்காகத் தம் பாட்டில் ''ஓராயிரம் வருடம்'' எனப் பாடினார்.

பாபநாசம்　　　சிவ. பார்த்திபன்

● ரசித்துப் பார்த்துப் படத்தை விமரிசனம் செய்யத் தெரியாத குட்டி கிருஷ்ணன் ''கல் தூண்'' படத்தைப் பற்றிச் சற்று அதிகமாகவே குறைகளை எழுதியிருக்கிறார். மேஜர் டைரக்ஷனில் மட்டுமல்ல எல்லா விஷயங்களிலும் மேஜர்தான்!

ஈரோடு-10　　　மேஜர் தாசன்

● ''கல் தூண்'' பட விமர்சனம் மற்ற பத்திரிகைகளிலிருந்து மாறுபட்டு நடுநிலையுடன் அமைந்திருந்தது. இப்படத்தின் மூலமாக டைரக்டராக மாறியிருக்கும் மேஜர் சுந்தரராஜன் மேலும் ஆர்வத்துடன், அக்கறையுடன் செயல்பட உங்களது விமர்சனம் உதவும்.

போடிநாயக்கனூர்　　　எஸ். சையது முகமது

● ஏப்ரல் மாத இறுதிவரை உள்ள எல்லாப் பத்திரிகைகளையும் புத்தகக் கடையில் போட்ட பிறகு ''பழைய புத்தகங்களைத் தேடி ஆசிரியர் பெயரைக் கண்டு பிடியுங்கள்'' என்ற போட்டியை அறிவித்து ஒரு குண்டைத் தலையில் போட்டீர்களே இது நியாயமா?

சென்னை　　　பத்மா மணி

● 'ஸயன்ஸ் ஃபிக்ஷன்' என்பது விஞ்ஞான வளர்ச்சியைச் சித்திரித்துக் காட்டுவதாய் எதிர்காலத்தில் அறிவியல் முன்னேற்ற நிலையைத் தொலை நோக்குடன் எடுத்துரைப்பதாய் இருக்க வேண்டும். ஏதோ கிஜாட், பூச்சி ராக்கெட் என்ற பெயர்களை உபயோகித்துக் கேலிக்கூத்துச் செய்வதல்ல.

கோலார்　　　ஸ்ரீராமன்

# வட்டமேஜை

● ''இரண்டு ஜெராட்டர்கள்'' நல்ல நகைச்சுவைச் சிறுகதை. என்னைச் சிரிப்பில் ஆழ்த்தியது. செல்லத்தின் ஓவியமோ உம்மணா மூஞ்சியைக் கூடச் சிரிக்க வைத்து விடும்!

லால்குடி　　　ஆர். சிவராஜ்

● இந்த வாரம் 'நொறுக்குத் தீனி' ரொம்பப் பிரமாதம் போங்கள். 'இந்த வார டி.வி. சினிமா' என்ற பகுதியை வாரந் தோறும் தவறாமல் வெளியிடுங்கள்.

எஸ். ஆர். பேட்டை　　　அ. ராஜா

● விக்கிரமாதித்தன் விமரிசனத்தைப் படித்ததும் எனக்குத் தோன்றியது: இந்த 81ல் மட்டுமல்ல 62லும் எம். ஜி. ஆர். எவ்வளவு எதிர்ப்புக்களைச் சந்தித்து முன்னேறி இருக்கிறார்!

திருவனந்தபுரம்　　　எஸ். எஸ். மணி



**கா**லை மணி எட்டு இருக்கும்.

வெளியே டாக்ஸியின் உறுமல் கேட்டது.

ரவி அறையை விட்டு வெளியே வந்து எட்டிப் பார்த்தான்.

இரண்டு பேர் டாக்ஸியை விட்டு இறங்கிக் கொண்டிருந்தனர்.

அவர்களைப் பார்த்த ரவியின் மனம் மகிழ் வால் மலரத் தொடங்கியது.

''வாடா அருண்... வாம்மா...'' என்ற அந்த இருவரையும் வரவேற்ற ரவி, நித்யா வைப் பார்த்தான். பின், ''நித்யா, இவன் தான் – நான் அடிக்கடி சொல்வேனே. அந்த 'கமர்கட்டு' அருண். கல்லூரியில் படிக்கும் போதும் இவன் கமர்கட்டை விடுவதில்லே. எனக்கு இருக்கும் ஒரே உயிர் நண்பன். இவங்க மிஸஸ் ரேவதி அருண்...'' என்று அவர்களைத் தன் மனைவி நித்யாவுக்கு அறி முகப்படுத்தினான்.

''பின், ஒரு கடிதம் எழுதிவிட்டு வந்திருக்கக் கூடாதா? நானே ஸ்டேஷனுக்கு வந்திருப் பேனே...'' என்றான் அருணைப் பார்த்து.

''திடீரென்று உன்னைப் பார்க்கணும்போல் இருந்தது. புறப்பட்டு வந்துட்டோம்.'' என்று சிரித்துக் கொண்டே பதில் சொன்னான் அருண்.

அருண் நித்யாவைப் பார்த்தான். அவள் பார்வையை வேறுபுறம் திருப்பிக்கொண் டாள்.

''போன வருடம் நடந்த இவன் திரு மணத்துக்கு நான் போக முடியலே. அது திடீரென்று நடந்த திருமணம். அதன் பின் தம்பதிகளாய் இப்போதுதான் பார்க் கிறேன்'' என்ற ரவி, ''நித்யா, உன் திற மையை எல்லாம் காட்டி 'ஏ-ஒன்'னாகச் சமைத்து இவனைத் திணறவை பார்க்கலாம்'' என்றான் சிரித்தபடி.

நித்யா உண்மையிலேயே அருணைப் பார்த் தது முதல் திணறிக் கொண்டிருந்தது அவ னுக்கு எங்கே தெரியப் போகிறது?

**கா**லை டிபன் முடிந்தது.

''அருண், ஸோ ஸாரிடா...'' என்று மெல்லத் தயங்கிக் கொண்டே பேச்சைத் தொடங்கினான் ரவி.

''என்னடா?'' என்று அவனைப் பார்த் தான் அருண்.

''ம்... ஒண்ணுமில்லே. நாளைக்கு எல்.ஏ. ஓ. ஆடிட். ஆபீசிலே கொஞ்சம் வேலே. நீயும் உன் மனைவியும் வந்திருக்கும்போது ஆபீஸ் போக விருப்பமில்லேதான். ஆனால், தவிர்க்க முடியலே. போயிட்டு மதியம் லீவு போட் டுட்டு வந்துடறேன்...''

''இதுக்கு ஏண்டா தயங்கறே? போடா... போயிட்டு வாடா...'' என்றான் அருண் சிரித்துக் கொண்டே.

**ர**வி புறப்பட்டுப் போய்விட்டான்.

காலை மணி பதினொன்று இருக்கும்.

நித்யா சமையலில் மூழ்கியிருந்தாள். அருணின் மனைவி ரேவதி அவளுக்கு உதவி செய்து கொண்டிருந்தாள்.

''ரேவதி, நீ போய்க் குளிச்சிட்டு வந் துடேன்.'' என்று நித்யா சொல்ல, ''சரி'' என்று புறப்பட்ட ரேவதி, துணிகளை எடுத்துக் கொண்டு கிணற்றங்கரையை நோக்கி நடந்தாள்.

அவள் சென்ற சற்று நேரத்துக் கெல்லாம், ''ரேவதி'' என்று குரல் கேட்கவே, நித்யா திரும்பினாள்.

கதவருகே அருண்.

''ரேவதி குளிக்கப் போயிருக்கா'' என்ற நித்யா, அவனது கண்களைச் சந்திப்பதைத் தவிர்க்க முயன்றாள்.

''நித்யா, என்மேல் உனக்குள்ள கோபம் இன்னும் தீரலே போலிருக்கு.''

''கோபமா? எனக்கா?'' என்று கேட்ட நித்யா, குரலில் விரக்தி இழையோடச் சிரித்தாள்.

''நடந்து முடிந்த அந்தச் சம்ப வங்களை நீ கேட்டால் என்மேல் நீ கொண்டிருக்கும் இந்தக் கோபம் ஓரளவாவது நிச்சயம் குறையும். ப்ளீஸ், பேச எனக்குக் கொஞ்சம் சந்தர்ப்பம் கொடு...''

''.....''

அவளது மௌனத்தை அவன் சம்மதமாக்கிக் கொண்டான். பின் தொடர்ந்தான்.

# சிவப்பு விளக்கு

ஜெயவண்ணன்



''அன்னுறவுக்குத் திருமணம்னு உன்கிட்டே சொல்லிட்டு ஊருக்குப் போனேன். அவன் திருமணம் முடிஞ்சதும், அம்மா மூலம் அப்பா கிட்டே உன்னைப் பற்றிக் கூறிச் சம்மதம் வாங்கிக்கலாம்னு நம்பியிருந்தேன். முக்கியமான நண்பர்களை நேரில் அழைக்கத் திருமணத்துக்கு முதல் நாள் மாலை பத்திரிகையோடு அண்ணன் வெளியே போனான். விடியற்காலை நாலு மணிக்கு முகூர்த்தம். வெளியே போன அண்ணன் திரும்பி வரலே. முகூர்த்த நேரம் கடந்து கொண்டிருந்தது. எல்லோரும் அண்ணனைக் காணாமல் தவியாய்த் தவித்துக் கொண்டிருந்தோம்.

'இந்தத் திருமணம் தடைபட்டால் என் பெண்ணோட வாழ்க்கையே பாழாயிடும். உங்க இரண்டாவது மகனை விட்டு என் மக கழுத்திலே தாலி கட்டச் சொல்லுங்க'ன்னு பொண்ணோட அப்பா எங்க அப்பா அம்மா காலில் விழாத குறையாகக் கெஞ்சினார். எங்க உறவுக்காரப் பெரியவர்கள் பலரும் அதுவே சரியென்று ஆமோதித்து, பல முன் உதாரணங்களை எடுத்துச்சொன்னாங்க. கொஞ்ச நேரம் தடு



மாறிய என் அப்பா, அம்மா என்னை இந்த ஏற்பாட்டுக்குச் சம்மதிக்கச் சொன்னாங்க. நான் மறுத்தேன். அம்மா என்னைத் தனியே அழைச்சுக்கிட்டுப் போய், 'ஒரு பொண்ணோட மனசு இன்னொரு பெண்ணுக்குத்தான் தெரியும். இந்தக் கல்யாணம் நின்னுட்டா, கல்யாணப் பொண்ணு தற்கொலையைத் தவிர வேறு எந்த முடிவுக்கும் வரமாட்டா. உன் அண்ணனாலே நம்ப குடும்பத்துக்கு ஏற்பட இருக்கிற பழியை நீதான்டா துடைக்கணும்'னு கெஞ்சினாங்க. அம்மாவோட அந்தக் கட்டளையை என்னால் மீற முடியலே. ரேவதியோட கழுத்திலே தாலியைக் கட்டி மனைவியாக்கிக் கிட்டேன்....''

அவன் சொன்னதைக் கேட்ட நித்யா, ஒரு கணம் நிதானித்தாள். பின், ''உங்க அண்ணன்?'' என்று கேட்டாள்.

''நண்பர்களைப் பார்க்கச் சென்றவருக்கு அவரது அருமை நண்பர்கள் குடிப்பதற்குக் கொஞ்சம் 'தண்ணீர்' கொடுத்திருக்கிறார்கள். மணமகனாகப்போகிறவர் அல்லவா? மகிழ்வை நண்பர்களுடன் பகிர்ந்து கொண்டிருக்கிறார். கொஞ்சம் 'ஓவர் டோஸ்'. மயங்கி விழுந்தவரை காலை பத்து மணிக்கு அந்த அருமை நண்பர்களே வீட்டுக்குக் கொண்டு வந்து சேர்த்தனர்....''

''அப்படியா?'' என்று வியந்து நித்யா, ''உண்மை இப்போதுதான் எனக்குப் புரியுது'' என்றாள்.

''போகட்டும். நீ எப்படி இருக்கே?''

''சந்தோஷமாக இருக்கேன். என் கணவர் எனக்கு எந்தக் குறையையும் வைக்கவில்லை....''

''எப்படியோ, நடந்து போனதை மறந்து நீ சந்தோஷமா இருந்தா அதுவே போதும்.''

''மறந்துட்டுத்தான் இருக்கேன்.'' என்ற நித்யா, ''ரேவதி....''' என்று இழுத்தாள்.

''நல்ல பெண். தட்ஸ் ஆல்'' என்று கூறிவிட்டு அந்த இடத்தை விட்டு நகர்ந்தான் அருண்.

**ம**றுநாள் மாலை.

அருணையும் ரேவதியையும் ரயிலேற்றி அனுப்பிவிட்டு வீடு திரும்பினான் ரவி.

நித்யா காப்பியுடன் எதிரே வந்து நின்றாள்.

காப்பியை ஆற்றிக் கொண்டே, ''யாரை நாம் எந்தச் சந்தர்ப்பத்தில் சந்திப்போம்னு யாராலும் சொல்ல முடியாது'' என்றான் ரவி.

''என்ன சொல்றீங்க?''

''ரெண்டு பேர். அவுங்க ரெண்டு பேரும் ஒருத்தரை ஒருத்தர் விரும்பினாங்க. கல்யாணம் செய்துக்கலாம்னு முடிவு செய்திருந்தாங்க....''

அவன் சொல்லச் சொல்ல நித்யாவின் மனத்தில் மெல்ல மெல்லப் பயம் சூழத் தொடங்கியது.

விஷயம் தெரிந்துதான் இவர் கேட்கிறாரா? அருண் - உண்மையை இவரிடம் கூறிவிட்டாரா?

நினைக்கும்போதே நித்யாவின் உடம்பு மெல்ல நடுங்கி ஓய்ந்தது.

'நானும் அருணும் மனத்தளவில்தான் விரும்பினோம்'னு சத்தியம் செய்தாலும் ஆண் மனம் சந்தேகப்படுவது இயல்புதானே?'

நிம்மதியற்ற கடல் அலையாய் நித்யாவின் மனம் தடுமாறத் தொடங்கியது.

ரவி தொடர்ந்தான்: ''நானும் ரேவதியும் மனசார விரும்பினோம். எனக்கு நிரந்தரமான வேலை இல்லை என்று காரணம் காட்டி ரேவதியின் அப்பா சம்மதம் தர மறுத்தார். அவளை என் நண்பனின் மனைவியாக இப்போ சந்திப்பேன்னு நான் எதிர்பார்க்கவே இல்லே.''

நித்யா திடுக்கிட்டுத் தலை நிமிர்ந்தாள்.

''ஆமாம், நித்யா. நான் இந்த உண்மையை உன்கிட்டே முன்பே சொல்லலே. இப்போ சொல்லாமலும் இருக்க முடியலே. எப்படியோ ரேவதியும் அருணும் சந்தோஷமா இருக்காங்க. அதுவே போதும்.''

அவன் பேச்சைக் கேட்ட நித்யா அப்படியே அதிர்ந்து போய் நின்றுவிட்டாள்.

---

புகழ் பெற்ற நீக்ரோ அறிஞரான புக்கர் வாஷிங்டன் ஒரு முறை அவசரமாக ரயிலைப் பிடிக்க வேண்டியிருந்தது! ஒரு குதிரை வண்டிக்காரனை அணுகினார். ஆனால் வண்டிக்காரனோ "நான் கறுப்பர்களுக்கு வண்டி ஓட்டுவதில்லை!" என்று மறுத்து விட்டான். புக்கர் அவனைக் கெஞ்சி, தாமே வண்டி ஓட்டுவதாகவும், அவனை உட்கார்ந்து வரும்படியும் கேட்டுக் கொண்டார். வண்டிக்காரன் "சரி" என, வண்டியைத் தாமே ஓட்டிக் கொண்டு போய், ரயிலைப் பிடித்தார்.

- எல். ரவிசங்கர்



# பாடுகிறார் பாலசந்தர்!





முத்துசாமி தீட்சிதரின் நண்பர் ஒருவர் நோயினால் அவதிப்பட்டுக் கொண்டிருந்தார். என்ன வைத்தியம் செய்தும் பிரயோசனப் படவில்லை. அவருக்குக் கிரக நிலை சரியில்லை என உணர்ந்த தீட்சிதர் பிருகஸ்பதே எனத் தொடங்கும் அடாணா ராகக் கீர்த்தனையைப் பாடித் துதித்து வியாழ பகவானின் கருணையை வேண்டினார். நண்பருக்கு ஆரோக்கியம் திரும்பியது.

இதன் பின்னர் தீட்சிதர், 'இதே போல் வேறு கிரகங்களின் பாதிப்பால் சிரமப்படுகிற மக்களும் இருப்பார்களே அவர்களும் துதி பாட உதவலாமே' என்ற பெரு நோக்குடன் நவகிரக கீர்த்தனைகளை இயற்றினார். கர்நாடக இசை உலகில் இவை மிகவும் பிரபலமாயின.

'கிரகங்களாவது மனிதனின் உலக வாழ்க்கையைப் பாதிக்கவாவது?' என்று அலட்சியம் செய்பவர்கள் கூட தீட்சிதரின் இசையில் மெய் மறக்கலாம். 'சுக்கிர தசை அடிக்கிறது' என்றும், 'சனி பிடித்திருக்கிறது' என்றும் கூறி நம்புபவர்களோ, இசையுடன் கூட இறையுணர்வும் கொள்ளலாம்!

மேல் நாடுகளிலேயே — சந்திர மண்டலத்துக்கும் அதற்கு அப்பாலும் சென்று திரும்பி விட்ட அமெரிக்காவிலேயே இன்று கிரக பலன்களில் நம்பிக்கை அதிகரித்து வருகிறது. எனவே நவகிரக கீர்த்தனைகளை உள்ளடக்கிய வீணை பாலசந்தரின் புதிய எல். பி. ஸ்டீரியோ இசைத்தட்டு ஆல்பத்துக்கு இங்கு மட்டுமின்றி மேல் நாட்டிலும் சுக்கிர தசை அடிக்கலாம்!

இரு எல். பி.க்களைக் கொண்ட இந்த ஆல்பத்தில் பாலசந்தர் வீணை வாசித்தது மட்டுமல்ல, முதன் முறையாகப் பாடியும் இருக்கிறார்! பயப்பட வேண்டாம்! வீணை வாசிப்பவர்கள் கூடவே பாடுவது சகஜம் தானே? அதிலும் இந்த நவக்கிரக கீர்த்தனைகளில் இசை மட்டுமின்றி சொற்களும் உச்சரிப்பும் முக்கியமல்லவா? ஒவ்வொரு அடியையும் வீணையில் வாசிக்கும்போதே அடக்கமாகப் பாடிவிட்டு, பிறகு இசை நுணுக்கம் விகசிக்க மறுபடி வீணையில் வாசிக்கிறார் பாலசந்தர். இது, மாலை நேர மல்லி மொட்டுக்களின் அழகைச் செடிகளில் பார்த்து ரசித்துக் கொண்டிருக்கையிலேயே அவை 'குப்'பென்று மலர்ந்து மணம் பரப்புவது போலிருக்கிறது.

வீணை பாலசந்தர் பாடுவது மட்டுமல்ல, இந்த இருபத்தைந்தாவது வெள்ளி விழா இசைத்தட்டின் தொடக்கத்தில் பேசவும் செய்கிறார்! ''ஐ ஆம் பாலசந்தர்!'' என்று தொடங்கி ஆங்கிலத்தில் பேசுவது நவகிரக கீர்த்தனைகளுக்கு முகவுரையாக மட்டுமின்றி இதற்கு முன் அவர் தந்துள்ள 72 மேளகர்த்தா ராக இசைத்தட்டுகளுக்கு அவரே புகழ் மாலை சூட்டுவதாகவும் இருக்கிறது. '' 'எதிர்கால இசை உலகுக்கு நான் அன்பளிப்பாக வழங்குகின்ற சாகா வரம் பெற்ற சொத்து' என்று என்னாலேயே வர்ணிக்கப்பட்ட இசைத்தட்டுக்கள்'' என்று பாலசந்தரே கூறிக்கொள்ளும்போது நமக்கு ஆட்சேபம் எழுப்பத் தைரியம்வருமா என்ன? 'எத்தனையோ துறைகளில் காலி தகர டப்பாக்களெல்லாம் ஏகமாகச் சத்தம் எழுப்பிச் சுய விளம்பரம் தேடுகிற இந்நாளில் ஒரு மேதையும்தான் தாராளமாகப் பெருமைப்பட்டுக் கொண்டு போகட்டுமே; தகுதியுள்ளவர்கள் சொல்லிக் கொள்வதில் என்ன தவறு' என்று சமாதானப்படுத்திக் கொள்வதற்குள் முன்னுரை முடிந்து வீணையை மீட்டத் தொடங்குகிறார் பாலசந்தர். நாமும் இசையில் லயிக்கத் தயாராகிறோம். வெகு சீக்கிரமே புது வெள்ளத்தில் துள்ளித் திரிகிற மீன் போல நாமும் நாத வெள்ளத்தில் ஆனந்தமாக நீந்த ஆரம்பிக்கிறோம்.

இந்த எல். பி. இசைத்தட்டுக்களின் மேலுறை கூட பாலசந்தரின் விசேஷ கவனத்தைப் பெற்றுள்ளது. இரண்டு மடிப்புக்களை உடையதாய் விளங்குகிற மேலுறையில் ஓவியர் ராஜம் தீட்சிதரின் படத்தையும், நவக்கிரகங்களின் ஓவியங்களையும் தீட்டியுள்ளார். சாகித்தியங்களின் சமஸ்கிருத

வடிவங்கள், தமிழ் ஆங்கில மொழிபெயர்ப்புக்கள் எல்லாம் அதிலேயே அச்சாகியுள்ளன. தொலைந்து போகக்கூடிய தனித் தாளின்றி மேலுறையிலேயே அச்சிட்டிருப்பது நல்ல யோசனை.

பாலசந்தரின் சீடர்களான காயத்ரியும், மாதவனும் குரு பக்தியோடு வாசிக்க ஒலிகள் நன்கு இழைந்து ஒன்றுகியுள்ளன. மன்னார்குடி ஈசுவரன் மிருதங்கம், விநாயகராம் கடம், ஹரிசங்கர்–கஞ்சிரா. வீணைக்கு எந்த அளவு வாசிக்க வேண்டுமோ வாசித்துச் சிறப்பித்துள்ளார்கள். ஒவ்வொரு பாடலின் இறுதியிலும் மோரா கொடுத்து முடிப்பது பேஷா இருக்கிறது.

நவகிரகங்கள், அனைத்து உயிரினங்களின் தலைவிதியையும் நிர்ணயிக்கும் சக்தி வாய்ந்தவை என்பதை ஒப்புக்கொள்வோமாயின், பாலசந்தர் இந்த நவகிரக கிருதிகள் அடங்கிய இசைத் தட்டை நமது தேச மக்களுக்கோ அல்லது அகில உலகுக்கோ மட்டுமின்றி அண்ட சராசரத்துக்கே சமர்ப்பித்துள்ள பரந்த மனப்பான்மையைப் பாராட்டலாம் தான்! யார் கண்டார்கள், விண்வெளி விஞ்ஞானம் அடைந்து வரும் வேகமான முன்னேற்றத்தைப் பார்த்தால் பாலசந்தரின் இசைத்தட்டு சீக்கிரமே செவ்வாய் கிரகத்தில்கூட ஒலிக்கலாம்தானே! அவருடைய கிரக சேர்க்கை சரியாக இருந்தால் என்னதான் நடக்காது! —குட்டி கிருஷ்ணன்

மேலட்டை வண்ணப் படம்:

**ஏ. ஆர். வி. பக்தா**

---

**மீ**ண்டும் ஒரு சிவசங்கரியின்கதை சினிமாவாயிருக்கிறது. — இப்போது வித்தை தெரிந்தவர் கைகளில்.

கால்வாசி ஹிந்திப் படம். முக்கால்வாசி தமிழ்ப் படம். தளர்ந்த நடையும் முகம் நிறையத் தாடியுமாய் இந்தி ஃப்ளாஷ் பேக்கோடு நாயகன் (சுரேஷ்) லக்னோவிலிருந்து சென்னை வருகிறார். ஜாகை ஆபீஸ் தோழி அஸ்வினி குடியிருக்கும் அதே வீட்டில். பல காதல் கணைகளுக்குத் தப்பிய தாடி அஸ்வினியிடம் சிக்க, திருமணம்.. குழந்தை.... கான்ஸர்.... மரணம்... எனக் கதை முடிகிறது.

சுரேஷும் அஸ்வினியும் அசத்துகிறார்கள். லக்னோ டீ. வி.யிலிருந்து பெறு ஹல்சி என்று ஒரு பெரியம்மா நடித்திருக்கிறார்கள்! அடேயப்பா! என்ன துடிப்பு, என்ன ஈடுபாடு! லக்னோ டீ. வி. ரசிகர்கள் கொடுத்து வைத்தவர்கள். துருதுருப்பும் வயசுக் கோளாறும் பாடாய்ப் படுத்தும் வனிதா கடைசியில் போடுவது அப்பா தலையில் இடி.

(ஐயாமார்களே! உங்க வீட்டில் உள்ள வயசுப் பெண்களை யாராவது கிழவர்கள் ஓட்டும் சைக்கிள் ரிக்ஷாவிலே ஸ்கூலுக்கு அனுப்புங்க! இல்லாட்டி....)

மகேந்திரனின் காமெடி யூனிட் (சாமிக்கண்ணு, மூர்த்தி, குமரிமுத்து) இதிலும் சக்கைப் போடு போடுகிறது! இந்தி வசனங்கள் படு அமெச்சூர்!

லக்னோவின் குறுகிய சந்துகள், பரந்த வீடும் முற்றமும், பழுப்பும் சாம்பலுமாய்க் கோட்டைகள், சிதிலங்கள், காலையும் மாலையும் அள்ளித் தெளிக்கும் வண்ண நேரங்களில் திறந்த வெளிகளில் ஒரு நாச்காணு நடனம் – ஹலோ அசோக்குமார்! கொஞ்சம் கையைக் கொடுங்கள்!

பாடல்கள் அனைத்தும் அருமை. அதுவும் அந்த பூபேந்தரின் இந்திப் பாடல்... அப்பப்பா! என்ன கம்பீரமான வாய்ஸ்! இளையராஜா ரசனைக்கு மற்றொரு எடுத்துக்காட்டு.

எடுத்துக்கொண்ட கதையைச் சொல்லத் தெரிந்த லாகவம்; இந்தி வசனங்களைத் தமிழில் மொழிபெயர்த்துக் காம்ப்ரமைஸ் பண்ணாத தைரியம்; ஒவ்வொரு பாத்திரத்தையும், உறவு முறைகளையும் சிறப்பாக உருவாக்கியிருக்கும் நுட்பம்... தமிழ்த் திரையுலகை மாற்றியே தீருவேன் என்று கங்கணம் கட்டியுள்ள அசட்டு மனிதர் மகேந்திரனுக்காக அவசியம் பார்க்க வேண்டிய படம். —ஸ்ரீ வே



# வானத்தை ஆராய இவ்வளவு செலவா?

## கேள்வி பதில்



✠ என். பானு, திருச்சி
கே: ஸ்விஸ் பாங்க் மாதிரி நம் நாட்டில் ஏன் இல்லை?

ப: வாஞ்சு கமிட்டி ஒன்று இப்படிப்பட்ட பாங்குகள் நம் நாட்டில் இருப்பது பொருளாதாரத்துக்கு நல்லது என்று முன்பு அறிக்கை தந்திருந்தது. ஸ்விஸ் பாங்கில், உலகில் உள்ள பலர் பணத்தைப் போட்டு வைக்கிறார்கள் — நூறு சதவிகிதம் ரகசியமாக இருக்கும் என்பதால் இப்படிப் பணம். போடுபவர்களில் பலர் பல வருடங்கள் அதை எடுப்பதுகூடக் கிடையாது. இதன் காரணமாக ஸ்விஸ் பாங்குகளிடம் ஏராள பணம் இருப்பதால், பல தொழில்களுக்குக் கடன் கொடுத்து உதவுகிறது; நாடும் முன்னேறுகிறது.

✠ என். டி. ராதா, புது [illegible]



கே: மாமியார் சிறப்பிதழ் வெளியிட்டால் என்ன?
ப: பல ஆயிரம் நாட்டுப் பெண் வாசகர்களை இழந்துவிடுவோமோ என்று ஆசிரியர் பயப்படுவதாகக் கேள்வி.

✠ லக்ஷ்மி ராமாமிர்தம், சென்னை-5
கே: ஆறாவது அறிவை உடைய மனிதன் கண்டு பிடிக்க முடியாத கொலைகாரனை ஐந்து அறிவே உள்ள நாய் கண்டுபிடித்து விடுகிறதே?

ப: மனிதனால் குருவி மாதிரி பறக்க முடியாது; மீன் மாதிரி தண்ணீருக்குள் இருக்க முடியாது; அணில் மாதிரி மரத்தில் ஏற முடியாது — இப்படி எத்தனையோ அவனுக்குத் தெரியாது. ஆறாவது அறிவின் காரணமாக அவன் எல்லா ஜீவராசிகளிலும் உயர்ந்தவனாகி விட்டான். தனக்குத் தெரியாத வித்தையை அவன் வேறு ஒரு ஜீவன் அல்லது கருவி மூலம் சாதித்துக் கொள்ள முடியும். திருடனைக் கண்டு பிடிக்கத் தெரியாவிட்டால் என்ன? நாயின் மோப்ப சக்தியின் உதவியால் திருடனைக் கண்டுபிடிக்கலாம் என்று கண்டு பிடித்திருக்கிறானே!

✠ ஏ. ஜோசப்ராஜ், அண்ணாமலை நகர்
கே: விஞ்ஞானிகள் ஏன் வானத்தை ஆராய்வதில் பெரும் செல்வத்தைச் செலவழிக்கிறார்கள்?

ப: பஞ்ச பூதங்களான நிலம், நீர், நெருப்பு, காற்று, ஆகாயம் ஆகியவைகளில் நான்கை மனிதன் ஆராய்ந்து ஏராளமான பலன்களைப் பெற்றுள்ளான். வானத்தை ஆராய்வதும் மனித சமுதாயத்தின் முன்னேற்றத்துக்கு உதவும் என்பதில் சந்தேகமில்லை. இதற்குச் செலவாகும் பணம் வீண் விரயமில்லை. உங்களுக்குத் தெரியுமா இங்கிலாந்தில் உள்ள எந்த ஊருக்கும் டில்லி போன்ற நகரங்களிலிருந்து எஸ். டி. டி. (நேரடி டெலிபோன்) மூலம் பேச முடியும். இது எப்படிச் சாத்தியமாயிற்று? விண்வெளி ஆராய்ச்சியின் விளைவால்தான்!

✠ எஸ். நிரஞ்சனா சந்தானம், பாரக்பூர்-743 101
கே: அந்தக்கால தமிழ் எழுத்தாளர்களில் யார் யாரை உங்களுக்குப் பிடிக்கும்?

ப: ஆனை வை. குஞ்சிதபாதம், மஞ்சேரி எஸ். ஈசுவரன், புரசு பாலகிருஷ்ணன், கொனஷ்டை, சாமுவேல் ஆசீர்வாதம், கி. ரா. கோபாலன் என்று பலர்.

✠ அருணகண்ணன், காட்பாடி
கே: சட்டசபை நிகழ்ச்சிகள் சிரிப்புக்கு இடமாகி விட்டனவே?

ப: சிரிப்புக்கு மட்டுமல்ல; செருப்புக்கும்!

பரிசு பெறுபவர்:

திருமதி லக்ஷ்மி ராமாமிர்தம்
20 நமசிவாய முதலி தெரு,
சென்னை-600 005



# காதல் பருவத்தினர் காராகிருகத்தில்!

அந்நாளில் சிறையில் அடைபட்டிருந்த தேச பக்தர்கள் எல்லாரும் இளைஞர்கள்! நாற்பதாண்டு சிறைத் தண்டனை பெற்ற வ. உ. சி.க்கு வயது முப்பத்தொன்று! அவரோடு சேர்ந்து பத்தாண்டு காலச் சிறை தண்டனை பெற்ற சிவாவுக்கு வயது இருபத்தொன்று! இவர்களுக்கு விதித்த கொடுந் தண்டனைகளை எதிர்த்துப் பேசியதற்காக ஐந்தாண்டு சிறைதண்டனை பெற்ற கிருஷ்ண சாமி சர்மாவுக்கு வயது இருபத்திரண்டு! ஏன்? பாண்டிச் சேரியில் அடைக்கலம் புகுந்தபோது பாரதி யாருக்கே வயது இருபத்தாறுதான்!

இவர்கள் மனைவியரோடு வாழ்ந்தவர்கள். ஆம்: காதற் பருவத்தினர்! காதலியரைக் கைவிட்டு, சிறைச்சாலை என்னும் காராக் கிருகத்தில் அடைபட்டவர்கள்! இதனை நினைவில் கொண்டுதான்,

''மாதரையும் மக்களையும்
வன்கண்மையாற் பிரிந்து
காதல் இளைஞர்
கருத்தழிதல் காணாயோ?''

என்று முக்கண்ணனுரின் மைத்துனரான முருகனிடம் பாரதியார் முறையிடுகின்றார்.

எட்டயபுரத்துக் கவிஞர் இன்னொன்றும் சொல்கிறார், கேட்போம்:

''இன்பச் சுதந்திர நின்
இன்னருளால் பெற்றதன்றே!
அன்பற்ற மாக்கள்
அதைப் பறித்தாற் காவாயோ?''

என்ற வாசகத்தில் ''சுதந்திரம்'' என்பது மக்களிலே ஒவ்வொருவருக்கும் இறைவன் தந்த பிறப்புரிமை'' என்கிறார் கவிஞர். இறைவன் தந்த அந்தப் பிறப்புரிமையை எங்கிருந்தோ வந்த பிரிட்டிஷ்காரன் இந்தியரிடமிருந்து பறித்துக் கொண்டால், அதனை மீட்டுத் தருவது அந்த இறைவனுடைய கடமையல்லவா? என்கிறார்.

மாக்களிலேயும் அன்பு வழி நடப்பவர்கள் உண்டு. அதனால், மாக்களிலும் கடைப்பட்டவர்கள் ஏகாதிபத்திய வெறியர்கள் என்று சொல்லுவார் போல, ''அன்பற்ற மாக்கள்'' என்று குறிப்பிடுகின்றார்.

கண்ண பெருமான் மீது - எண்ணற்ற பாடல்களைப் பாடி பக்தி செய்த பாரதியார் அந்தப் பக்தியும் பறந்து போகும் என்று கூறி எச்சரிக்கிறார்.

''நீயும் அறமும்
நிலைத்திருத்தல் மெய்யானால்
ஓயுமுனர் எங்களுக்கு
வோர் வர நீ நல்குதியே!''

இது 'நிந்தாஸ்துதி' என்று புலவர்கள் சொல்வார்களே, அந்த வகையைச் சேர்ந்தது.

'சுதந்திரதேவியின் துதி' என்னும் தலைப்பு தந்து பாரதி புனைந்துள்ள பக்திப் பாடலையும் பார்ப்போம்:

இதந்தரு மனையி னீங்கி
இடர்மிகு சிறைப்பட்டாலும்
பதந்திரு விரண்டு மாறிப்
பழிமிகுந் திழிவுற்றாலும்
விதந்தரு கோடி யின்னல்
விளைந்தெனை அழித்திட்டாலும்
சுதந்திர தேவி! நின்னைத்
தொழுதிடல் மறக்கிலேனே!"

''அடையக் கூடிய பதத்தையோ அதாவது பதவியையோ, செல்வத்தையோ இழக்க நேர்ந்தாலும் சரி, பழி மிகுந்து இழிவுகள் என்னைச் சேர்ந்தாலும் சரி, சுதந்திர தேவி! நின்னைத் தொழுதிட மறக்கிலேன்!'' என்று உணர்ச்சியோடு பாரதியார் உறுதி மேற்கொள்கிறார்.

தொடர்ந்து 'தேவி, நின் ஒளி பெறாத தேயம் ஒன்று உண்டானால் அது தேசந் தானா?' என்று வினாஎழுப்புகிறார்.

'அந்தத்தேசத்தில் உள்ள மக்களெல்லாம் உயிர் உள்ளவர்கள்தானா? உணர்வுள்ளவர்கள்தானா? செம்மையான அறிவுள்ள வர்கள்தானா?' என்று கேள்விகள் கேட்கின்றார்.

'சுதந்திர தேவியின் ஒளியைப் பெறாத தேயத்திலே காவிய நூல்கள் உண்டா? ஞானக் கலைகளும் வேதங்களும் உண்டா?'

சுதந்திரத்தை இழந்து அன்னிய தேசத்திற்கு அடிமைப் பட்டுள்ள ஒரு தேசத்தில் வாழ்வோரெல்லாம் 'பாவிகள்' என்கிறார். ஆம். பூர்வ புண்ணியத்தின் பலன்சுதந்திரம்! பாவத்தின் விளைவு அடிமை வாழ்வு!

(மயிலை இலக்கிய வட்டம்-பாரதிய வித்யாபவன் சொற்பொழிவிலிருந்து)

ம.பொ.சி



Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd, at the Bharathan Press, Race Course, Road, Guindy, Madras-600 032. (Phone: 431543) Editor: K. Rajendran

# இரண்டே வருடங்களில் விற்பனையில் முதல் இடம்

# JOHNSON®

## மிக்ஸர் கிரைண்டர்

25 வருடத்திற்கு மேற்பட்ட அனுபவமும், இந்தியாவிலே சமையலறைச் சாதனங்களில் ஏராளமான வகைகளும் கொண்ட ஜான்சனின் சீரிய படைப்பு ஜான்சன் மிக்ஸர்—கிரைண்டர். எங்கெங்கும் அறிமுகப் படுத்தினாலும் ஐயமின்றி தலை சிறந்ததென இரண்டே வருடங்களில் பீடு நடை போடுகிறது.

ஏன் எனக் கேட்பின் :

---

இலவசம் ! தனி எவர்சில்வர் கிண்ணம்! உலர்ந்த அரவைக்கென தனியான எவர்சில்வர் கிண்ணமிருப்பதால் மசாலாக்களின் மணமும், ருசியும் மில்க் ஷேக்குகளில கலக்காமல் பாதுகாப்பு அளிக்கிறது.

---



அதிக சுகாதாரம் பாகங்களை எளிதாக கழட்டும்படி தயாரிக்கப் பட்டிருப்பதால் நீங்கள் துப்புரவாகக் கழுவ முடிகிறது. உணவுப் பண்டங்களின் துகள்கள் உள்ளே நின்று விடும் சந்தர்ப்பம் இல்லை.

---

முழுமையான பாதுகாப்பு. பிளேட் பாகங்கள் இரு கிண்ணங்களிலும் உறுதியாக இணைக்கப் பட்டிருப்பதால் இயக்கத் தில் பிளேட் பறந்து விடாமல் பாதுகாப்பு அளிக்கிறது.



---



கன ரக ஓட்டம் அதிக உறுதியான 450 வாட் மோட்டார் நமது இந்திய சமையலுக்கென்றே சிறப்பாக அமைக்கப் பட்டிருக்கிறது. 45 நிமிடங்கள் நிறுத்தாமல், தடையின்றி ஓட்டலாம்.

---

மற்ற சிறப்பு அம்சங்கள்:

- மோட்டார் குளிர்ச்சியாக இருப்பதற்கென தனியான காற்றோட்டம்
- சீரிய கலவை மற்றும் அரவைக்கென மேம்படுத்தப்பட்ட பிளெட் அமைப்பு
- ஒரு வேகத்திலிருந்து மற்றொரு வேகத்திற்கு செம்மையாக மாற்ற இஞ்சர் ஸ்விட்ச்
- ஒரு வருடத்திற்கு உத்திரவாதம் ஜான்சன்





**JOHNSON®**

## இயக்கத்திலும், ஆற்றலிலும் இணையிலாச் சிறப்பு கொண்டது

BE-6001A

REGISTERED No. M. 4302
Registered as a Newspaper in Sri Lanka

